# செந்தமிழ்ச் செல்வி



## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்

## ஐம்பதாவது சிலம்பு

பன்னிரண்டாவது பரல்

சிலம்பு-௫0] வள்ளுவர் ஆண்டு ௨00௭ ஆடி. (Aug'76) [பரல்-௧௨

---

## உள்ளுறை

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௰ | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௭, ஆடி<br>ஆகஃச்ட் 1976 | பரல் கஉ |
|---|---|---|

## மறைமலையடிகள் நூற்றாண்டு விழாவும் செந்தமிழ்ச் செல்வி பொன் விழாவும்

மறைமலையடிகளாரின் பெற்றோர் பிள்ளைப்பேற்றின் பொருட்டு நாகையிலிருந்து நால்வர் பாடல் பெற்ற திருக்கழுக்குன்றத்துக்குச் சென்று நாற்பதுநாள் நோன்பிருந்தனர். அதன் பிறகு அடிகள் பிறந்தமையால் அவருக்கு வேதாசலம் (வேதகிரி) என்ற திருக்குழுக்குன்றத்து இறைவன் திருப்பெயர் இடப் பெற்றது. 1976 ஜுலை 15 அடிகள் நூற்றாண்டுப் பிறந்த நாளாதலால் அன்று திருக்கழுக்குன்றஞ் சென்று சிறப்பு வழிபாடாற்றக் கருதினோம்.

முந்தின நாளே கழக மேலாளர் திரு ஆ. சுப்பையா பிள்ளை திருக்கழுக்குன்றஞ் சென்று அடிகளார்மீது அன்பு பூண்டவரும் அங்குள்ள உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியருமான புலவர் தி. நா. அறிவொளி, எம். ஏ. அவர்கள் உதவிகொண்டு தங்குவதற்குச் சத்திரம் அமர்த்தியதோடு அடிவாரத்திலும் மலை மேலுமுள்ள திருக்கோயில்களில் சிறப்பு வழிபாடாற்றுவதற்கு வேண்டியவற்றை முன்கூட்டி ஒழுங்குபடுத்தி வைத்திருந்தனர்.

15—7—76 காலை 6 மணிக்குச் சுற்றுலாப் பேரியங்கியிலும் கழக இயங்கியிலும் திருக்கழுக்குன்றத்துக்குப் புறப்பட்டோம். அடிகளார் மக்களில் மறை மாணிக்கவாசகர் (மணிமொழி), மறை திருநாவுக்கரசர், மருகர் வை. குஞ்சிதபாதம் (தூக்கிய திருவடி), மகள் கு. திரிபுரசுந்தரி (முந்நகரழகி), பேர்த்தி தி. ஞானம் (அறிவு) ஆகியோரும், கழகச் செயற்குழு உறுப்

பினர்களில் இருவர், கழகப் பொது மேலாளர், மறைமலையடிகள் நூல் நிலையத்தின் நூலகர், கழக ஓவியர், இசைப் புலவர் புண்ணியகோடி, கழகப் பணியாளர்களிற் சிலர், ஆட்சியாளர் குடும்பத்தினர் முதலியோரும் இயங்கிகளிற் செல்லும்போது சைதையில் மறைமலையடிகள் திருப்பெயரமைந்த பெரிய பாலத் தின்மேற் போகவும், செங்கைக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் 42 ஆவது கிலோ மீட்டரில் உள்ள காட்டாங்குளத்தூரில் புதி தாக அமைக்கப் பெற்றுவரும் மறைமலையடிகள் புதுநகரின் நகரமைப்பு ஆட்சியலுவலகம், சாலைகள் முதலியவற்றைக் காணவுமான நற்பேற்றைப் பெற்றுக் கழிபேருவகை எய்தினோம். காலை 8 மணிக்குத் திருக்கழுக்குன்றம் போய்ச் சேர்ந்ததும் சத்திரத்தில் சிறிது நேரம் இளைப்பாறிப் பின்பு அடிவாரத் திருக் கோயில் வழிபாட்டுக்குச் சென்றோம். அங்கே வழிபாடு நடை பெறும்போது கோயில் ஓதுவார் திரு சண்முக சுந்தரனாரும் இசைப் புலவர் புண்ணியகோடியாரும் பன்னிருதிருமுறை, திருப்புகழ், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ஆகியவற்றினின்றும் பாடல்களைத் தேர்ந்தெடுத்து மிகவும் உருக்கமாகப் பாடி மனம் நெகிழச் செய்தனர். 12 ஆண்டுகட்கொருமுறை சங்கு தீர்த்தத்தில் கிடைக்கப் பெற்ற சங்குகள் திருக்கோயிலில் தொகுத்து வைக்கப் பெற்றிருக்கின்றன. அவற்றைக் கண்டு வியப்பும் மகிழ்ச்சியும் பெற்றதோடு படம் பிடித்துக் கொண் டோம். வழிபாடு மிகவுஞ் சிறப்பாக நடைபெறுதற்குக் கோயில் குருக்கள்மார்களும், கோயிலதிகாரியும் பெருந்துணையா யிருந்தனர்.

பின்னர் நால்வர் பேட்டையில் சமய குரவர் நால்வர்க் கெனக் கட்டப்பெற்ற தனிக் கோயிலுக்குச் சென்று வணங்கி னோம். அங்கே அடிகளாரின் சிறப்புமிக்க மாணவரும் மாம்பாக்கக் குருகுலத் தலைவருமான தவத்திரு அழகரடிகள் இவ்விழாவில் கலந்து கொள்ள வேண்டுமென்றே அங்கு வந்திருந்து கலந்து கொண்டமை எல்லோருக்கும் மிக்க மகிழ்ச்சி யளித்தது.

அங்கிருந்து அகவைமிக்க ஒரு சிலரைத் தவிர ஏனையோர் மலைமேல் ஏறிச் சென்று திருக்கோயிலில் மிகவும் சிறப்பாகச் செய்யப் பெற்ற வழிபாட்டைக் கண்டு களிதுளும்பினர். அங்கே ஓதுவார் இருவரும் மாறி மாறிப் பாடிய திருமுறைப் பாடல்களைக் கேட்டு நெக்கு நெக்குருகலாயினர். அன்று ஒரு கழுகு மட்டும் வந்து குருக்களிடம் உணவு எடுத்தமை கண்டவர் யாவரும் வியப்பும் மகிழ்ச்சியும் எய்தினர்.

மலைமேலிருந்து கீழிறங்கிச் சத்திரத்துக்கு வந்தவுடன் அடிகளார் திருவுருவப் படத்துக்கு வழிபாடு நடைபெற்றது. அப்போதும் இசைப்புலவர் இருவரும் பாடிய பாட்டுக்களைக் கேட்டு எல்லோரும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தனர்.

அதன் பின்னர் எல்லோரும் அமர்ந்திருந்து சென்னையிலிருந்து ஆக்கிக் கொண்டு வந்த சுவைமிக்க மூவகை உணவுகள், வற்றல்கள், பழங்கள் முதலியவற்றை உண்டு மகிழ்ந்தனர். சிறிது நேரம் ஓய்வு எடுத்துப் பிறகு அங்கிருந்து 15 ஆவது கி. மீட்டரிலுள்ள மாமல்லபுரம் சென்று கவின்மிகு சிற்பங்களைக் கண்டு திருவான்மியூர்வழியாகச் சென்னைக்குத் திரும்பினோம்.

இந்த முறையில் அடிகளார் நூற்றாண்டு விழாவின் தொடக்கம் இறையருளால் இனிது நிறைவேறியது.

செந்தமிழ்ச்செல்விப் பொன்விழா

செந்தமிழ்ச் செல்வி 50 ஆம் சிலம்பு 15—8—1976 இல் முடிவுபெறுவதால் அன்று மறைமலையடிகள் நூல்நிலையத்துக் கருகிலுள்ள அருள்மிகு மல்லிகேசுரர் திருக்கோயிலில் சிறப்புவழி பாடாற்றவும் செல்வி 50 சிலம்புகளையும் அழகுறப் பேழையில் வைத்துச் செந்தமிழ்ச் செல்விப் பொன் விழாத் தொடக்கமாகக் கொண்டாடவும் ஏற்பாடு செய்யப்பெறும்.

அடிகளார் நூற்றாண்டு விழாத் தொடக்கம் 15—7—76 இல் நடைபெற்றுச் சரியாக ஒரு திங்கள் கழித்து 15—8—76 இல் செந்தமிழ்ச் செல்விப் பொன் விழாத் தொடக்கம் நடைபெற இருப்பது திருவருட் குறிப்பே.

இவ்விரு பெரு விழாக்கட்கும் குழு அமைத்துத் தனித் தனியே மலர் அச்சிட்டு இவ்வாண்டு திசம்பர் 15 க்குள் அவற்றை மிகவும் சிறப்பாகக் கொண்டாடத் திருவருள்புரியும்படி எல்லாம்வல்ல அம்மை அம்பலவாணர் பொன்னடிகளை வாழ்த்தி வணங்கி வேண்டுவோம்.

இவ் விழாக்களை யொட்டி அடிகளாரின் தனித்தமிழ்க் கொள்கையும் அவர் போற்றி வளர்த்த தமிழ், சைவ நன்னெறிகளும் மேலும் சிறப்புற்றோங்கப் பாடுபடுதல் வேண்டுமெனவும் செந்தமிழ்ச்செல்வி 75 ஆம் சிலம்பை இறைவன் துணை கொண்டு முடித்துப் பவள விழாக் கொண்டாடவும் நாமனைவரும் உறுதி பூணுதல் வேண்டும்.

வ. சு.

———



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*

**அழகரடிகள் (இளவழகனர்)**

## 12. வரலாற்றுத் தலைவர்

மறைத்திரு மறைமலை அடிகளார் 15-7-1876இல் நாக பட்டினத்தில் தோன்றினர். 15-9-1950இல் தமது 75ஆம் வயதில் பல்லாவரத்தில் தமது மாளிகையில் மறைந்தார்.

**1876—1896** நாகை வாழ்க்கை : (20-ஆண்டுகள்) இளம் பருவ வாழ்க்கை :

இவர் தந்தையார் சொக்கநாத பிள்ளை என்பவர், பெரிய நிலக்கிழார் ; செல்வத்துக்கும் செல்வாக்குக்கும் ஏற்ற உடற் சிறப்பும், அழகும், குணமும் வாய்ந்தவர். இவர் மனைவியார் சின்னம்மாளிடத்தில் அடிகளார் தோன்றினர்.

பிறந்த குடும்பத்துக்கு ஏற்றபடி அடிகளார்க்கு உடல் மேன்மையும், அழகும், இனிய குரலும், இசைத் திறனும், பெருங் குணமும், இரக்கமும், தலைமைப்பாடும் இனிது பொருந்தியிருந்தன.

8ஆம் வயது நடக்கும் போதே இவர் தந்தையார் கால மாகிவிட்டார். வளர்க்கும் பொறுப்பும், கல்வி கற்பிக்கும் பொறுப்பும், நல்லவர் சேர்க்கைப் பொறுப்பும், தாயாருடையன ஆயின.

அக்காலத்தில் மதுரைநாயகம் பிள்ளை என்பவர் சிவநேய மிக்கவராய், நாகை வெளிப்பாளையம், 'சைவ சித்தாந்த சபை'யை நிறுவி நடத்தி வந்தார். அடிகளார் அப்போதே நல்வினை வயத்தால் திருநீறு சிவமணி அணிந்துகொண்டு, தேவார திருவாசகம் முதலிய திருமுறைகளை ஓதுவதுண்டு. 5 ஆம் வயதிலேயே இவர், தம் தகப்பனர் கையைப் பிடித்துக் கொண்டு வெளியில் உலாவி வந்த காலங்களில், இவரைக் கண்டவரெல்லாரும், இவர் அழகிலும் சைவத் தோற்றத்திலும் மிகவும் ஈர்ப்புண்டனர். மதுரைநாயகம் பிள்ளையும் இதற்கு விலக்கல்லர். அடிகளார், அவர் தந்தையார், சைவக் கோலங்கள், இவர்க்குக் கவர்ச்சியளித்தன. சிவநேய மிக்கவ ராதலால் இவர்களோடு தொடர்பு கொண்டார்.

தந்தையார் இறந்தபின், மறைமலை அடிகளாரின் குழந்தைப் பருவத்துக்கு மதுரைநாயகம் பிள்ளை, உற்ற தந்தை யாரைப்போ லிருந்து பல நாள் வரையில் நல்லிணக்கத்துக்கும் நல்வழிக்கும் துணை புரிந்து வந்தார். 5 ஆம் வயது முதலே இந்த நற்றுணை இவர்க்குக் கிடைத்து வந்தது. தாயார்க்கும் ஒரு வகையிற் சுமை குறைந்தது.

மதுரைநாயகம் பிள்ளை பிரிவில் (1920), அடிகள் பாடி யருளிய இரங்கற் பாக்களில்,

> "சின்னஞ் சிறிய காலத்தே சிறந்த தந்தை இழந்தேற்குக்
> கன்னல் மொழிசேர் தமிழ்க்குரவர் இருவ ரோடுங் காதல்மிகும்
> அன்னை யனைய கின்றனையும் அரிய துணையாய் அடைந்திருந்தேன்
> பின்னை யிருவர் பிரிந்தேகப் பெரிய துணையாய்ப் பிறங்கினையே"

என்று நன்றி கருதி உருகிய பிரிவாற்றுமைச் செய்யுளால் இவ் வுண்மை இனிது புலப்படும். ('தமிழ்க் குரவர் இருவர்' என்றது, வெ. நாராயணசாமி பிள்ளையும், வீரப்ப செட்டியாரு மாவர்.)

முறைப்படி 5ஆம் ஆண்டில் நாகபட்டினத்தில் ஆங்கிலக் கல்லூரியில் அடிகளார் கல்வி பயிலத் தொடங்கினர். அவர் முன்னை நல்வினை, தமிழ்க் கல்விக்கு ஈர்த்தது. மதுரைநாயகம் பிள்ளை பாடம் கேட்டுக் கொண்டு இணக்கமும் கொண்டிருந்த நாராயணசாமி குரவரிடத்திலேயே, இவரும் 10வது வயதி லிருந்து போக வர இருந்தார்; தமிழ் பயிலவுந் தொடங்கினர். நன்னூலும், திருத்தணிகைப் புராணம், திருவிளையாடல், பெரிய புராணமும் முதலிய இலக்கண இலக்கியங்களை வரலாற்று முறையாகப் பாடம் கேட்டார். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலான சங்க இலக்கியங்களில் முன்னைப் புண்ணியத் தொடர் பாகக் கல்வி வளர்ந்தது; இயற்கையாகவே இவர்க்கு எளிதில் தமிழ்ப் பயிற்சிகள் சிறந்து வந்தன. 15 ஆம் வயதுக்குள் உயர்ந்த நூல்கள் சில மனப்பாடமாயின; ஊன்றிய தமிழ்ப் பயிற்சிகள் பதினும் அகவையிலிருந்து தொடங்கின. இளமை யிலேயே இவர்க்குச் சங்க நூல்களில் உள்ளம் ஈர்ப்புண்டமை எல்லார்க்கும் வியக்கத் தக்கதா யிருந்தது.

சிறு போதிலேயே 'சங்கப் புலவர்' என்று இவர் பெயர் எடுத்தார். 'சைவப் பேரறிஞர்' எனவும் புகழ் ஓங்கினர். இவர் ஆசிரியர் நாராயணசாமி குரவரே ஒருகால் இவரைச் 'சங்கப் புலவர்' என்று அழைத்து மகிழ்ந்தார். இவர் வருகிற போதும் போகிறபோதும், 'சங்கப் புலவர் வருகிறார், சங்கப் புலவர் போகிறார்' என்று பலர் வழங்குவதும் வழக்கமாயிற்று.

அக்காலத்தில் அடிகளார், நூல்களை முற்றும் மனப்பாடம் செய்து கொள்வது வழக்கம்; திருக்குறள், தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க் கணக்குகள், பிற்கால ஐந்து இலக்கணங்கள், ஐந்து காப்பியங்கள், பெரிய புராணம், திருவிளையாடல், கந்த புராணம், சிவஞானபோதம், சித்தியார் முதலியனவெல்லாம் அடிகளுக்குப் பெரும்பகுதி மனப்பாடம் என்ப; நினைவாற்றலோடு, இங்ஙனம் இவர்கள் கல்வி மணம் வீசும் நறுமலராய், நாளும் திகழ்ந்து வந்தனர்.

இத்தகைய நல்லோரை நல்லினத்திற் சேர்த்து மேன் மேலும் விளங்க வைக்க வேண்டும் என்று மதுரைநாயகம் பிள்ளை விரும்பினர்.

அக்காலத்தில் நாகையில் முத்தி மண்டபத்தில் தேவாரத் திருக்கூட்டத்தை ஏற்படுத்தி, வீரப்ப செட்டியார் என்னும் பெரியவர், சைவம் வளர்த்து வந்தார். யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், திருச்சி மீனாட்சி சுந்தரம் பிள்ளை முதலியவர்க்கு நண்பர். வேதாந்த சித்தாந்த நுட்பங்களின் தெளிவும், 'திருநீறு' 'சிவமணி' 'திருவைந்தெழுத்து' 'சிவபூசை' 'சிவாலய வழிபாடு' 'சிவ புராண படனம்' 'அடியார் நேயம்' முதலிய செய்கைகளும் உடையவர்; நாகை வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையின் தலைவர். நாகையிற் பெருமகனர்; இவர்களிடத்தில் அடிகளார்க்குத் தொடர்பு உண்டானல் நல்லதென்று கருதித் தம் ஆசிரியரையுங் கலந்து, மதுரைநாயகம், அடிகளை அப் பெரியவர்க்கு அறிமுகப்படுத்தினர்.

நூல்களில் சில கேள்விகளை அவர் கேட்க அடிகளார் நுணுக்கமாகவும் ஆழமாகவும் இனிமையாகவும் விடை கூறி வந்தார். அடிகளாரின் இளமையையும் பொலிவையும் ஆராய்ச்சியையுங் கண்டு, 'மேலும் மேலும் நுண் பொருள்களை இவர் அறிந்துகொண்டால் உலகுக்கு நலமாய் இருக்கும்' என்று கருதித், தாமும் தம்மிடம் வரும் அன்பர்களுமாக இவரோடு பழகி இணங்கிப் பலப்பல நற்கருத்துக்களை அறிவுறுத்து வந்தனர். அடிகளார்க்கு இத் துறையில் எல்லாம் எளிதிற் பொள்ளென விளங்கின; மேற்சென்றும் பல நுட்பங்களைக் கூறி வந்தார். அதனுல் அவர்கள் எல்லாரும் மிக்க மகிழ்ச்சி யடைந்து இஃது ஏதோ திருவருள் தோற்றமே என்று வியந்து மகிழ்ந்தார்கள்.

அடிகளுக்கு 20ஆம் ஆண்டு நடப்பதற்குள்ளாகவே, காரைக்கால் 'திராவிட மந்திரி' 'நாகை நீலலோசனி' 'பாஸ்கர ஞானேதயம்' 'இந்து மதாபிமானி', 'சச்சன இதழ்' முதலிய

வற்றிக்குக் கட்டுரைகளும் எழுதி வருவது வழக்கம். மறை நூலாகிய திருக்குறளின் முதல் குறளுக்கு 'முதற் குறள் வாத நிராகரணம்' என்றொரு நூலும் அப்போதே எழுதப்பட்டது. அது 'நாகை வாதி' என்பவருக்கு மறுப்பு நூல்; அதனால் நாவும், கையும், வாயும், இவர்க்குச் சரியாய் இல்லையேயென்று அடிகளார் இரங்கினர்.

அடிகளாரின் சங்க நூற்பயிற்சியை அறிந்து அக்காலத்தில் வியந்தவர்களுள் திருவனந்தபுரத்து 'மனோன்மணீயம்' சுந்தரம் பிள்ளை என்பவரும் ஒருவர்; நாடகத் தமிழின் இலக்கணம் அறிந்து 'மனோன்மணீயம்' இயற்றிய பெரியார். அடிகளார் அவரைப் பார்க்கும் பொருட்டுத் தம் ஆசிரியருடன் திருவனந்த புரம் சென்றிருந்தார். சங்க நூல்களில் 'நாடகத் தமிழின் இலக்கணம்' எத்தகையது என்று காணும் வகையில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை 'நாடகத் தமிழ்' எனத் தலைப்புக் கொடுத்து அடிகளாரை ஒரு விரிவுரை செய்ய ஏற்பாடு செய் தார். அடிகளாரின் விரிவுரை, அவரும் பிறரும் மதிக்கும்படி இருந்தன. அடிகளாரின் இளமையை நோக்கி மிகவும் வியந்த சுந்தரம் பிள்ளை, 'கல்லூரிகளில் ஆசிரியராய் இருப்பதற்கு இவர் ஏற்றவர்' என்று ஒரு தகுதிச் சீட்டும் வழங்கினர்.

நாகபட்டினத்தில் அடிகளார் பயின்ற ஆங்கிலக் கல்லூரியின் பாதிரியாரே, அடிகளாரை வரவழைத்துத் தமக்குத் தமிழ் கற்பிக்க வேண்டுமென்று கேட்க, அவ்வாறே அடிகளார் அவ்விளமையில் கற்பித்து வந்தார்; கற்பிக்கும் முறைகளையும் திறமையையும் பாதிரியார் கண்டு, அடிகளார்க்குத் தம் கல்லூரி யிலேயே அலுவல் கொடுப்பதாகவும் சொன்னர். வேறு கல்லூரியில் இருக்க விரும்பி, அடிகளார் அதற்கு இசைய வில்லை.

சென்னைச் சோமசுந்தர நாயகரிடம் அடிகளாரை ஆட் படுத்தியதும் மதுரை நாயகம் பிள்ளையே. நாயகர் திருவாவடு துறைக் குரவர்க்கும், நல்லசாமி பிள்ளைக்கும் அடிகளாரைப் பற்றித் தெரிவித்தார். திருவாவடுதுறைக் குரவராகிய அம்பலவாண தேசிகர், அடிகளைக் கண்டு அளாவியபோது, திரு. உ. வே. சாமிநாத ஐயர் அவர்களையும் அங்கே சந்திக்க நேர்ந்தது. ஐயர் அடிகளைக் கண்ட அளவிலேயே அகமும் முகமும் மலர்ந்து மிக மகிழ்ந்து, அடிகளாரின் இலக்கண இலக்கியச் சிறப்புப் பற்றியும் சங்க நூல் ஆராய்ச்சி பற்றியும், அடிகளார்க்கு இயற்கையாக அமைந்துள்ள நுண்ணிய அறிவு பற்றியும் தேசிகரிடம் தெரிவித்தார். தேசிகர் மகிழ்ந்து,

அடிகளார்க்கு அந்தப் பயணத்தில் பொன்னுடை போர்த்து மகிழ்ந்தார்.

தஞ்சையில், ஒரு நேரத்தில், பள்ளிகளின் கண்காணிப்பாளர் 'வில்லியம்ஸ்' என்பவரைப் பார்க்க நேர்ந்தது. யார் என்று கேட்க அடிகளார் 'வித்வான்' என்று விடை கூறினர்; அதனைக் கேட்ட அவர், 'ஒரு சிறுவர் நம்மிடம் வந்து, 'வித்வான்' என்று துணிவாகச் சொல்லுகிறாரே'' என்று வியந்து, 'உமக்கு என்னென்ன வரும்' என்று கேட்டார்; அடிகளார், 'இலக்கண இலக்கியம், சங்க நூல்கள் என்பவற்றோடு, சிவஞான போதமும், சிவஞான சித்தியாரும் பாடமும் உண்டு' என்று சொல்ல, அதைக் கேட்டு இறும்பூது எய்திச் சில இலக்கணக் குறிப்புக்களைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியுற்று, இவரைத் தஞ்சை மாவட்டத்திலேயே ஒரு பள்ளியில் அலுவலில் அமர்த்திக் கொள்ள வேண்டும் என்று விரும்பினர் என்ப.

ஒருமுறை இவர் திருநெல்வேலி போக நேர்ந்தது; அங்கே புலவர் கூட்டத்தில் இவர் விரிவுரை நடந்தது. 'தமிழ் இயற்கை மொழி' என்று பேசினர். இளமையிலேயே அடிகளார் புரட்சிக்காரர். வழக்கமாக அங்கங்கும் சொல்லிவரும் கருத்துக் களை மறுத்து, உண்மை நிலைநாட்டுவார். எதற்கும் அஞ்ச மாட்டார்.

இத்தகையவர் 'தமிழ் இயற்கை மொழி', 'அது இந்திய மொழி' என்று நெல்வேலியில் பேசியது வியப்பன்று; ஒருவர் எழுந்து மறுக்கத் தொடங்கினர். 'இந்தியாவின் ஒரு கோடியில் தமிழ் வழங்குவதாய் இருக்க, இதை இயற்கை மொழி என்பதும், இந்தியா முழுவதும் வழங்கிய இந்திய மொழி என்பதும் பொருந்தாதே' என்று அவர் கூறினர். அடிகளார், அதன்பின் மேலும் ஊக்கங் கொண்டு, 'இந்தியா மட்டுமன்று உலகமெங்கும் தமிழ்மொழியே முன்பு திகழ்ந்தது' என்று சான்றுகளுடன் விளக்கினராம்.

மற்றொரு நாள், 'சமக்கிருதம் தமிழைப் போல் தொன்மை யான மொழியன்று' என்றும், சமக்கிருதம் சில ஆயிர ஆண்டுக் காலமாகவே வழங்குகிறது; நம் நாட்டவரெல்லாரும் அம் மொழி கலவாமல் தமிழிற் பழக வேண்டும்' என்று சொல்ல, அதற்கும் மறுப்பு எழுந்தது; அப்போது சங்க நூலில் வரும் 'உலகம்' என்னும் சொல், தமிழ்ச் சொல்லே என்று சான்றுகள் பல காட்டித் தங் கோள் நிறுவினர் என்ப.

அடிகளார் சிறு பருவம் முதலே துறவு நிலைப் பெரியோ ரிடம் அன்புடையவர்; ஒருநாள், சூரியனர் கோவில் மடத்தில், சைவத்தின் மேல் நிலை பெறப், போகவேண்டுமென்று மதுரை

நாயகம் பிள்ளையிடம் கூறினர்; 'தாயார்க்கு உதவியாய் இருப்பது முக்கியம்' என்று சொல்லி, அவர் நிறுத்திவிட்டாராம். ஒருமுறை எழுத்தர் அலுவல் ஒன்றுக்கு அவர் இடம் செய்யப், 'பள்ளியில் ஆசிரியராய் அலுவல் பார்க்கவே விருப்பம்' என்று அடிகளார் கூறிவிட்டார் என்றுந் தெரிகிறது.

இவ்வளவும் அடிகளாரின் 20 ஆம் வயதுக்குள் நிகழ்ந்தவை. இளமைப் பருவம் இங்ஙனம் தமிழ்க் கல்வியிலும் சைவ சித்தாந்தத்திலும் பெருக ஊறி, அதனுல், அடிகளார் செவ்விள ஞாயிறு போலவும், செழும் பெருஞ் செந்தாமரை போலவும், கலை வளரும் திங்கள் போலவும், பலர்க்கும் அச்சமும் அன்பும் பெருக விளங்கி வந்தனர். அதுவரையில் அடிகளார் வாழ்க்கை நாகையில் நிகழ்ந்தது.

பேரும் தொண்டும் மிக்க நாவலர் டாக்டர் எஸ். சோமசுந்தர பாரதியார், ராவ்பகதூர், டாக்டர் வ. சு. செங்கல்வராய பிள்ளை, திருப்புகழ் மணி, டி. எம். கிருஷ்ணசாமி ஐயர், டாக்டர் பி. சுப்பராயன், திவான்பகதூர், ஆர். வி. கிருஷ்ணய்யர், டி. கே. சிதம்பரநாத முதலியார், எஸ். வையாபுரி பிள்ளை, சி. என். முத்துரங்க முதலியார், S. அனவரதவிநாயகம் பிள்ளை, சி. டி. நாயகம் முதலியோரெல்லாம் அடிகள் மாணவர்கள்.

சென்னைத் திரு. சோமசுந்தர நாயகர், தம் நூலுக்கு அடிகளை முகவுரையும், கருத்து வேறுபடுவார்க்கு மறுப்புகளும் எழுதுமாறும், தம் விரிவுரைகளின் இடையே விரிவுரை செய்யுமாறும் விரும்புவார். அவர் மனைவியார் சிவஞானத்தம்மையாரும் அடிகளுக்கு ஏற்ற உணவுகள் சமைத்து வழங்குவார்.

**1897—1910 சென்னை வாழ்க்கை: (14 ஆண்டுகள்) இது, அலுவல் வாழ்க்கை:**

1897: இவ்வாண்டில் அடிகளுக்கு 21 ஆவது வயது நடந்து வந்தது; ஜெ. எம். நல்லசாமி பிள்ளை சிற்றூரில் மாவட்ட நடுவராய் விளங்கினவர். 'சிவஞான போதம்' என்னும் சைவசித்தாந்த முதல் நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டவர். அவர் நடத்திய 'சித்தாந்த தீபிகை' என்னும் தமிழ் இதழுக்கு ஆசிரியரடிகள் இவ்வாண்டில் இதழாசிரியராய் விளங்கினர். 'சிவஞான சித்தியா'ரின் அளவை யிலக்கணச் செய்யுட்களுக்கு அவ் விதழில் அடிகளார் விளக்கம் தந்திருக்கிறார்; பத்துப்பாட்டுள் ஒன்றுன குறிஞ்சிப்பாட்டுக்கு உரையும், ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்யுட்கள் சிலவும் வெளிவந்தன. 1898 ஆம் ஆண்டில், சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழாசிரியராய் அமர்ந்தார்.

1903 : தனித் தமிழ் இயக்கத் தொடக்கத்துக்கு வித்தாய் இருந்த, தமிழறிவு மிக்க நீலாம்பிகை அம்மையார், அடிக ளுக்குப் புதல்வியாகத் தோன்றினுர். தமிழ்ச் சைவத் தொடர் பால், இவ் வம்மையிடம் அடிகளுக்கு மிக்க அன்பு.

கல்லூரியில் இவ்வாண்டில் முல்லைப் பாட்டுக்கு அடிகள் கூறிய உரை விளக்கத்திற்கு மாணவர்கள் மகிழ்ந்து, தாமே தம் பொருட் செலவில் 'முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை' என ஒரு நூல் வெளிவர உதவினர்.

1904 : இராமநாதபுரத்தில் அரசர் மரபில் வந்த பாண்டித் துரைத் தேவர், மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவி, அடிகளார் சிறப்பறிந்து தமிழ்ச் சங்கப் புலவராக ஆக்கிக்கொண்டார். சங்கத்தின் ஆண்டு விழாக்களில் அடிகளாரை வருவித்துச் சிறப் பித்தார்; இராமநாதபுரத்துக்கு வருவித்தும், தம் அரண்மனை யில் இருத்தி நட்புக் கொண்டு விருந்தோம்பி அடிகளின் புலமை நுட்பங்களை விளங்கவைத்தார். அடியேம் பிறந்தது 10—4—1904இல்.

1907 : சமக்கிருதத்திலிருந்து பண்டிதர்களும் வியக்கும்படி 'சாகுந்தல நாடகத்தை' அடிகளார், அழகாக மொழி பெயர்த் தார்.

**1911—1920: முயற்சி வாழ்க்கை: (10 ஆண்டுகள்) மாளிகை, அச்சகம், நூல்நிலையம் முதலிய அமைப்புகளுக்கு முயற்சிகள் :**

கிறித்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் அலுவலை 10—4—1911-ல் விடுத்து, 1—5—1911-ல் சென்னையையடுத்த பல்லாவரத்தில் அடிகள் குடிபுகுந்தார்கள். 'பொதுநிலைக் கழகம்' அமைக்கப்பட்டது. அங்கே ஒரு தனி மனையில் கழகத் துக்கு மாளிகை அமைக்க அடிப்படை இடப்பட்டது. அது முதல் காவியாடைக் கோலத்தில் அடிகள் விளங்கினுர்கள்.

1913 : அடிகளார், வடநாட்டுக்கு இவ்வாண்டிந பயணம் புறப்பட்டார். கல்கத்தா சமரச சன்மார்க்க சபையில் தலைமை ஏற்ருர். விசயவாடா, தவளேச்சுரம், பூரி, புவனேச் சுரம், பலாசூர், கல்கத்தா, பேலூர், டார்சிலிங், காசி, பிரயாகை, அரத்துவாரம், டேராடூன், தில்லி, ஆக்ரா, நாசிக், பம்பாய், செகந்திராபாத், போலவரம், ஐதராபாத் முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டும் அங்கங்கும் தமிழின் சைவ சித்தாந்த நெறிகளைப் பரவச் செய்துகொண்டும், கடவுளை வணங்கிக் கொண்டும் வந்தார்.

1918: திருவரங்கம் பிள்ளை முதல் முதலாக இவ்வாண்டில் பல்லாவரம் வந்தார்; அடிகளாராலும் குடும்பத்தாராலும் அவருக்குச் சிறந்த வரவேற்பு நிகழ்ந்தது.

1920இல் அடிகளாரின் 'திருவாசக விரிவுரை' தொடர்பாக வெளிவருவதற்குக் காரணமான 'செந்தமிழ்க் களஞ்சியம்' என்னும் மாத இதழைத் திருவரங்கனார் தோற்றுவித்தார். அடிகளார் உணர்ச்சியும் ஆணையும் கொண்டு சென்னைச் 'சைவ சித்தாந்தக் கழக'மும், இவ்வாண்டில் தொடங்கப்பட்டது. அவர் இளவல் தாமரைச் செல்வர் சுப்பையா பிள்ளை கழகத்தைக் கண்ணுங் கருத்துமாகக் காத்து வளர்த்துப் புகழ் பெறச் செய்திருக்கிறார்.

1927 இல் நீலாம்பிகை அம்மையின் திருமணம் மயிலை கபாலீசுவரர் திருக்கோயிலில் நடந்தது; தமிழகப் பேரறிஞர் பலர் வந்திருந்தனர்; ஆதிசைவர் என்னும் தமிழ்க் குருக்கள் இறைவன் திருமுன்னிலையிலிருந்து மங்கல அணி எடுத்துக் கொடுத்தார். மணமகன் திருவரங்கனார் மணமகள் நீலாம்பிகையார்க்கு அணிந்தார். திருமுறைத் திருமந்திரங்கள் ஓதப்பட்டன; அடிகளாரும் அனைவரும் மலர் சொரிந்து வாழ்த்தினர்.

1931: பல்லாவரத்தில் 'பொதுநிலைக் கழகத்' திருக்கோயிலுக்குக் குடமுழுக்கும், 'பொதுநிலைக் கழக' விழாவும் இவ்வாண்டில் சிறப்பாக நடைபெற்றன. தமிழ்த் திருமுறைத் திருமந்திரங்களையே ஓதி அனைத்தும் நடைபெற்றன. பேரறிவு சான்ற அறிஞர் பெருமக்களின் இனிய விரிவுரைகள் நிகழ்ந்தன. விழா, சி. என். முத்துரங்க முதலியார், நடுவர் மாசிலாமணி முதலியார் முதலிய செல்வர்களின், அறிஞர்களின் ஆதரவில் இனிது நடந்தது.

1932 இல் அடிகளாரின் கடைசித் திருமகள் திரிபுரசுந்தரியாரின் திருமணம் பல்லாவரத்திலேயே அம்பலவாணர் திருக்கோயிலின் திருமுன்னிலையில் நிகழ்ந்தது. அடிகளாரே ஆசிரியராக இருந்து திருமுறைத் திருமந்திரங்கள் ஓதித் திருமணத்தை நிகழ்த்தினார்.

1935 இல் 'The Ocean of Wisdom' என்னும் இரு திங்களுக்கு ஒரு கால் வெளிவரும் ஆங்கில வெளியீடு அடிகளால் தொடங்கப்பட்டது. 6—1—1934 இல் 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' என்னும் நூல் வெளி வந்தது. நூலின் முகவுரையில் சேக்குவியர் நாடக நூல்களுடன் நாடக இயல்களை நன்கு ஆராய்ந்து இது எழுதப்பட்டது என்று அடிகளார் குறித்திருக்கின்றார். சென்னையில் இவ்வாண்டில், 'திருவள்ளுவர் திருநாள்

கழகம்', அடிகளின் அரிய தலைமையில் விழாக் கொண்டாடியது. இனிய முறையில் ஒரு மலரும் வெளியிட்டது.

1936 இல் சென்னைப் புரசவாக்கத்தில் தொழிலாளருக்குத் 'தமிழ் எப்படி கற்பது?' என்று அடிகளால் விளக்கப்பட்டது. 'அயல் மொழி மிகுதியாகக் கலந்தெழுதிய ஒரு நூலுக்குத், தாம் தனித் தமிழைப் பின்பற்றுவதாக முடிவெடுத்துக் கொண்டமையால், முகவுரை தரமுடியவில்லை' என்று, 21—9—1936 இல் கடிதம் எழுதி இருக்கிறார்.

1937 இல் இவ்வாண்டின் ஆகஃச்டு மாதத்தில், 'கட்டாய இந்திச் சட்டம்' வந்தது. சென்னைக் கோகலே மண்டபத்தில் அதற்கோர் எதிர்ப்புக் கூட்டம் நடந்தது. அடிகள் தலைமை ஏற்றார்கள். 'இந்தி பொது மொழியா?' என்று ஒரு நூலும் அடிகளால் எழுதப்பட்டது. சென்னைக் கடற்கரையில் இதற்காக நூறாயிரக் கணக்கில் மக்கள் கூடிய பேரவை பெரிதாக நடந்தது. அதற்கும் அடிகளாரே தலைவர்; தமிழகத்தின் தலைவர் பலரும் அப்போது பேசினர்.

1940 இல் 'அனைத்திந்தியத் தமிழர் மத மாநாடு' சென்னையில் நடந்தது. 'அடிகளார் தலைமை ஏற்றார். Saiva Siddhanta as a Philosophy of Practical Knowledge' என்று ஒரு நூல் 29—4—1940 இல் வெளிவந்தது. முன்னுரை உட்பட 131 பக்கங்களே உள்ள இக் கட்டுரை நூலுக்கு 57 பக்கத்தில் மிக விரிவான ஆங்கில முன்னுரையை அடிகளார் எழுதியிருக்கிறார். இவ்வாண்டில் இந்தி மொழியைக் 'கட்டாயக் கல்வி' என்னும் நிலையிலிருந்து அரசு நீக்கிவிட்டது.

**1940—1950** அமைதி வாழ்க்கை (**10** ஆண்டுகள்) இஃது அடிகளார்க்கு 'இறுதி வாழ்க்கை' யாகும் :

1941 : அடிகளார் இவ்வாண்டு முதல் வெளியூர்க்குச் செல்வதைப் பெரும்பாலும் குறைத்துக் கொண்டார். 'ஆராய்ச்சி' 'நூல் எழுதல்' முதலியவற்றில் கடுமையான உழைப்பும் மேற்கொள்ளுவதில்லை. 13—12—1941 இல் 'சோமசுந்தரக் காஞ்சியாக்கம்' 3 ஆம் பதிப்பு முகவுரையுடன் வெளிவந்திருக்கிறது. 15—10—1941 இல் 'தமிழர் மதம்' என்னும் நூல் விரிவான ஆங்கில முன்னுரையுடன் வெளிவந்தது. எல்லாம் முன்பே முடிக்கப்பட்டவை.

1—1—1942 இல் 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை'யின் உரை வெளியீடு வெளிவந்தது. 8 ஆண்டுகளாக அடிகளார் இதனைத் திருத்தி அச்சிட்டு வந்ததனால் இதுவும்

முன்னாண்டுகளில் நிறைவேறியதே. இவ்வாண்டில், 25—5—1942 இல் தென்காசித் திருவள்ளுவர் கழகத்தைச் சேர்ந்த முத்துக்குமாரசாமி பிள்ளை என்பவருக்கு அடிகள் ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதில், மதுரை நடராச நாடார் போன்ற சைவத் தமிழ் அன்பரைப் பார்க்க இசைவுதான் என்று விருப்பம் தெரிவிக்கப்பட்டிருக்கிறது; நடராச நாடார் தென் காசியிலும் மாவட்ட நடுவராய் விளங்கியவர்.

1944இல் அடிகளார் பெரிதும் அன்பு பாராட்டிய நீலாம்பிகை யாரின் கணவரும், தம் முயற்சிகளுக்கு எஞ்ஞான்றும் பேராதர வாயிருந்து விளங்கிய பெருஞ் செயலாளரும், 'சைவ சித்தாந்தக் கழகத்'தின் அறிவார்ந்த முயற்சிகளுக்கு உழைப்பெடுத்த உண் மைத் தலைவருமாகிய திருவாளர் திருவரங்கனார் இவ்வாண்டில் மறைந்துவிட்டார். தமிழ்த் தொண்டு சிவத் தொண்டுகளுக்கு மிக்க ஆதரவாளராதலால் அடிகளார் உள்ளத்துக்கு இது பெருந் தளர்வைக் கொடுத்துவிட்டது!

1945இல் அன்பிற் சிறந்த மகளார் நீலாம்பிகையாரின் மறை வும் இவ்வாண்டில் நேர்ந்துவிட்டது; கணவரைப் பிரிந்து நீலாம் பிகையார் நெடுநாள் உயிர்வாழ மாட்டாதவரானார். தனித் தமிழ் இயக்கத்துக்கு வித்தானவரானதாலும் சிவநெறிச் செல்வி யாரானதனாலும் அம்மையார் பிரிவையும் அடிகளார் தாங்க மாட்டாதவரானார்; மருகரும் மகளாரும் அடுத்தடுத்து மறைந்து விட்டமை அடிகளார் உள்ளத்தை மிகப் பெரிதும் வாட்டி விட்டது.

1950: இவ்வாண்டு 15—9—1950இல் அருமை அடிக ளாரின் மறைவு நிகழ்ந்துவிட்டது. அதற்கு முன் இரண்டொரு கிழமைகளில் அடிகளார் உடல் தளர்ந்தது. 30—5—1950லும் 21—6—1950லும் சென்னைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சிப் பொறுப்பாளர்க்கு முறையே தமிழிலும் ஆங்கிலத் திலும் கடிதங்கள் எழுதியிருக்கிறார். மறைவதற்கு 3 கிழமைக்கு முன் இவை எழுதப்பட்டன. அவற்றில், அடிகளார் கையெ ழுத்துத் தமிழிலும், ஆங்கிலத்திலும் மணிகள் கோத்தாற் போல் அழகாகவே அமைந்துள்ளன.

அடிகளின் துணைவியார் 24—5—1950இல் மூன்றேமுக்கால் திங்களுக்கு முன்னர்த்தான் மறைந்தார். துணைவியார் மறைவு அடிகளைப் பின்னும் பின்னும் வாட்டி வதக்கிவிட்டது. மிகப் பதை பதைத்தார்; பற்றற்ற பெரியவராயினும், துணைவியார் அதுவரையிற் பட்ட பாடுகள் அடிகளாரால் நினைத்துப் பார்க்கா மல் இருக்க முடியவில்லை. துணைவியார் செய்ந் நன்றியை

அடிகள் நாளும் மறவாதவர். எல்லாப் பிரிவுகளாலும் பரிவு களாலும் அடிகளார் உள்ளமும் உடலும் பணி செய்ய மாட்டாத நிலையை எய்திவிட்டன; துணைவியார் உதவி, வாழ்க்கைக்கு அவ்வளவு இன்றியமையாதவை!

1876இல் தோன்றி 1950இல் தமது 75வது வயதில் மறைந்துவிட்ட அடிகளார்க்குத் தமிழகம் மிகவும் கடமைப்பட் டிருக்கிறது.

19ஆம் நூற்றுண்டில் அவர் இளைஞராய்ப் பயிற்சியில் விளங்கினர். 20ஆம் நூற்றுண்டின், முற்பகுதி முழுதும் அவர்கள் அருட் புலமையாட்சி தமிழகத்தில் நிகழ்ந்தது. ‘20 ஆம் நூற்றுண்டின் இணையற்ற புலவர்’ என்று கா. சுப்பிரமணிய பிள்ளை தம் இலக்கிய வரலாற்றில் சிறப்பித்தார்; தமிழகத்தாரிற் பெரும்பாலோர் கருத்து அது.

அடிகளார் பெருந்தன்மையும் இரக்கமும் முதலியன அவர் களுக்குத் தலைமையை வழங்கியிருக்கின்றன; விரிவுரைகளும் எழுத்துக்களும் வாழ்க்கைக் கட்டுப்பாடுகளும் உண்மைச் சுவை மிக்கு அடுத்து உதவியிருக்கின்றன.

அவ் வுண்மைச் சுவையும், புரட்சிக் கருத்துக்களும், தமிழர்க்காகவே தொடர்பாகப் பணி செய்து வந்தமையும், தனித்தமிழ் இயக்கமும், பெரும் புலமையும், சைவ சித்தாந்தத் தேர்ச்சியும், ஆராய்ச்சியும், முடிவுரைகளிற் காட்டிய பெருந் தன்மையும், இரக்கமும், புலவர்களைப் பெருமைப்படுத்தும் சிறப்புமெல்லாம் அன்பர்களை அவர்பால் அன்பு கொள்ளச் செய் தன. அழுக்காற்றினுல் யாராவது குறைகூறினுல், அன்பர்க ளாவோர் அதை எடுத்துச்சொல்லும்போது, ‘அவ்வளவில் அவர் மகிழ்க’ என்று விட்டுவிடுவதே நல்லது என்பார்; யார்க் கும் ஏதுந் தீங்கு செய்யார்; எவரையும் பகையார்.

பலர்க்கு அமையாத நற்பேறுகளெல்லாம் தவத்தோன்ற லாகிய அடிகளார்க்கு வாய்ந்து திகழ்ந்தன; உண்மையைக் காணும் விருப்பம், அதற்காக மிகவும் உழைப்பெடுத்து ஆராய்ந்து தேடிய அகப்புறச் சான்றுகள், வாழ்க்கைக் கட்டுப் பாட்டு ஒழுங்குகள், இடர்ப்பட்டும் இழப்புகளடைந்தும், எந் நிலையிலும், தமிழ் நெறியையே நாடி வந்தமை, பலதுறைக் கலையுதவிகள், நிறுவிய அமைப்புகள் முதலிய சிறப்புகளெல் லாம், தமிழகம் தக்க மதிப்போடும், உருக்கத்தோடும், நன்றி யோடும் போற்றிக் கொள்ளுதற்குரியன.

———

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(முன் இதழ் ௩௯௦ஆம் பக்கத்தொடர்ச்சி)

முல்[4]—பொருந்தற் கருத்து வேர்ச்சொல் (தொடர்ச்சி)

மள்கு—மாள்கு—மாழ்கு. மாழ்குதல்=1. கலத்தல். (W). 2. மயங்குதல். "குழறி மாழ்கி" (கம்பரா. மாரீசன் வதை. 237). 3. சோம்புதல். (திவா.). 4. மங்குதல், கெடுதல். "ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்குஞ் செய்வினை" (குறள் 653).

ப. க. மாழ்கு (g).

மாழ்கு — மாழா. மாழாத்தல் = 1. ஒளிமழுங்குதல். நாண்மதியே......மாழாந்து தேம்புதியால் (திவ். திருவாய். 2: 1: 6). 2. மயங்குதல். "மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து" (பொருந. 95).

மாழா—மாழாம்பலம்=தூக்கம். (அக. நி.).

மாள்கு—மாள். மாளுதல்=1. கெடுதல். 2. கழிதல். "மாளா வின்ப வெள்ளம்" (திவ். திருவாய். 4: 7: 2). 3. அழிதல். "அனுபவித்தாலும் மாளாதபடியான பாபங்கள்" (ஈடு, 4: 7: 3). 4. சாதல். "வஞ்ச முண்மையேன் மாண்டிலேன்" (திருவாச. 5: 93). 5. முடிதல். 6. செய்ய முடிதல், இயலுதல். அது என்னால் மாளாது. (உ. வ.).

மாள்—மாய். ஒ. நோ: நோள்—நோய். நோளையுடம்பு= நோயுண்ட வுடம்பு. மாய்தல்=1. ஒளி மழுங்குதல். "பகன் மாய" (கலித். 143). 2. கவலை மிகுதியால் வருந்துதல். 3. அறப்பாடு படுதல். அந்த வேலையில் மாய்ந்து கொண்டிருக்கிறேன். (உ. வ.) 4. மறத்தல். "மாயா வுள்ளமொடு பரிசிறுன்னி" (புறநா. 139). 5. மறைதல். "களிறுமாய் செருந்தியொடு" (மதுரைக். 172). 6. அழிதல். "குடியொடு... ...மாய்வர் நிலத்து" (குறள். 898). 7. இறத்தல். தம்மொடு தம் பெயர் கொண்டனர் மாய்ந்தோர்" (மலைபடு. 553).

ம., தெ. க., து. மாய்.

மாய்த்தல்=1. மறைத்தல். "களிறு மாய்க்குங் கதிர்க் கழனி" (மதுரைக். 247). 2. வருத்துதல். (உ. வ.) 3. கொல்லுதல். "மாய்த்த லெண்ணி வாய்முலை தந்த" (திவ். திருவாய். 4: 3: 4). 4. அழித்தல். "குரம்பையிது மாய்க்க மாட்டேன்" (திருவாச. 5: 5 4).

மாய்—மாய்கை=1. மயக்கம். 2. பொய்த் தோற்றம்.

மாய்—மாய்ச்சல்=1. வருத்தம் (W.). 2. மறைவு. (சது.). 3. சாவு. (யாழ். அக.).

மாய்—மாய்ப்பு=1. மறைவு. (W.). 2. சாவு. (W).

மாய்—மாய்வு=1. மறைவு; (சூடா.). 2. சாவு. "மாய்வு நிச்சயம் வந்துழி" (கம்பரா. இராவணன் வதை. 182).

மாய்—மாயம்=1. கருமை (கறுப்பு) (சூடா.). 2. மயக்கம், வியப்பு. "மாயவன் சேற்றள்ளற் பொய்ந் நிலத்தே" (திருவிருத். 100, உரை). 2. கனவு. "மாயங் கொல்லோ வல்வினை கொல்லோ" (சிலப். 16: 61). 3. நிலையின்மை. "என்மாய யாக்கை யிதனுட் புக்கு" (திவ். திருவாய். 10: 7: 3). 4. பொய். "வந்த கிழவனை மாயஞ் செப்பி" (தொல். கள. 22). 5. அறியாமை (அஞ்ஞானம்). "மாய நீங்கிய சிந்தனை" (கம்பரா. சித்திர. 51). 6. வஞ்சனை. "மாய மகளிர் முயக்கு" (குறள். 918). 7. மாயை. வருந்திட "மாயஞ் செய்து நிகும்பலை மருங்கு புக்கான்" (கம்பரா. மாயா சீதை. 96).

மாயமாலம்=1. பாசாங்கு. 2. மோசடி. 3. வஞ்சனையுள்ள பேய். (W.).

மாயமாலம்—மாய்மாலம்.

மாயம்—மாயன்=1. கரியன். "வண்ணமு மாய னவனிவன் சேயன்" (தொல். உவம. 30, உரை). 2. திருமால். "மாயனாய்.......மலரவனாகி" (தேவா. 1050: 6). 3. வஞ்சகன். (பிங்.).

மாயன்—மாயவன்=திருமால். "பெரியவனை மாயவனை" (சிலப். 17, படர்க்கைப் பரவல்).

மாயவள்=1. கரிய நிறமுடையவள். "மாயவண் மேனி போல்" (கலித். 35). 2. காளி. "மாயவ ளாடிய மரக்காலாடலும்" (சிலப். 6: 59).

மாயன்—மாயோன்=1. கருநிறமுடையோன். (பரிபா. 3: 1, உரை). 2. திருமால். "மாயோன் மேய காடுறையுலகமும்" (தொல். அகத். 5).

மாயோள்=1. கருநிறமுடையவள். "மாயோள் முன்கையாய்தொடி" (பொருந. 14). 2. மாமை நிறமுடையவள். "மாயோள் பசலை நீக்கினன்" (ஐங்குறு. 145). 3. வஞ்சகி. (W.). 4. காளி.

மாய்—மாயை. ஒ. நோ : சாய்—சாயை. மாயை=1. காளி. (பிங்.) 2. மறைப் பாற்றல் (திரோதான சக்தி)—(நாம

தீப. 753.) 3. பொய்த் தோற்றம். 4. பொய்த் தோற்ற வுரு. 5. மாயக்கலை (மாயவித்தை). "மாயையி னொளித்த மணிமே கலைதனை" (மணி. 18 : 155) 6. வஞ்சகம். (சூடா.) 7. மூல முதனிலை (பிரகிருதி) "பூதலய மாகின்ற மாயை முத லென்பர் சிலர்" (தாயு. பரிபூரண. 6).

மாயை—வ. மாயா. ஒ. நோ : சாயை—வ. சாயா (chaya). சாய்தல் = நிழல் விழுதல். சாயை = நிழல்.

மாள்—மாட்டு (பி. வி.). ஒ. நோ : நீள்—நீட்டு. மாளு தல் = முடிதல், செய்ய முடிதல். மாட்டுதல் = முடித்தல், செய்து முடித்தல்.

நான் இதைச் செய்ய மாட்டுவேன் = என்னால் இதைச் செய்ய முடியும்.

நான் இதைச் செய்ய மாட்டேன் = 1. என்னால் இதைச் செய்ய முடியாது (முன்னைப் பொருள்). 2. நான் இதைச் செய்ய விரும்பேன் (இற்றைப் பொருள்).

இங்ஙனமே, கூடுதல் முடிதல் ஆகிய துணைவினைகளும், உடன்பாட்டில் இயலுதற் பொருளையும், எதிர்மறையில் அல்லது அஃதின்றி அதனொடு விருப்பின்மை அல்லது விலக்குப் பொருளையும் உணர்த்தும்.

எ—டு : நான் வரக்கூடாது (விலக்கு).

நான் சொல்ல முடியாது (இயலாமையும் விருப்பின்மையும்) இப்பொருள்களின் நேர்ச்சி இடத்தையும் காலங் குறித்த சொல்லையும் பொறுத்திருக்கும்.

எ—டு : நீ சொல்ல முடியாது (இயலாமை மட்டும்).

நாளைக்கு நான் இதைச் செய்யமாட்டேன் (விருப்பின்மை யும் இயலாமையும்).

தமிழிற் பெரும்பாலும் துணைவினையாக வழங்கும் மாட்டுதல் என்னும் சொல் கன்னடத்தில், செய்தல் என்னும் பொருளில் தலைமை வினையாகவே வழங்குகின்றது.

எ—டு : நானு ஈ கெலச மாடு வெனு = நான் இவ் வேலை யைச் செய்வேன்.

மள்—மண்—மண. மணத்தல் = 1. பொருந்துதல். "மத் தகத் தருவியின் மணந்த வோடைய" (சீவக. 2211). 2. வந்து கூடுதல். "நிரை மணந்த காலையே" (சீவக. 418). 3. கலத் தல். "அறையும் பொறையு மணந்த தலைய" (புறநா. 118). 4. நேர்தல். "மருவுற மணந்த நட்பு" (கலித். 46). 5. கமழ்

தல். ''மணந்த சோலையும்'' (அரிச். பு. விவாக. 98). 6. அணைத்தல். ''திருந்திழை மென்றோள் மணந்தவன்'' (கலித். 131). 7. புணர்தல். (பிங்.) ''மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுள்'' (கலித். 24). 8. மணம் புரிதல். ''மணந்தார் பிரிவுள்ளி'' (நாலடி. 397). 9. கூடியிருத்தல். ''மணக்குங்கான் மலரன்ன தகைய வாய்'' (கலித். 25.)

மண—மணம்=1. கூடுகை. ''ஏதிலார் மணந்தனில் மனம் போக்கும்'' (காசிக. மகளிர். 10). 2. அன்பினைந்திணை, கைக்கிளை, பெருந்திணை என்னும் மணவகை. 3. நறுநாற்றம். ''மண நாறு படப்பை'' (பெரும்பாண். 354). 4. நறுமணப் பொருள் ''மணங்கமழ் நாற்றம்'' (மதுரைக். 447). 5. மதிப்பு. ''பணமுள்ள வனுக்கே மணமுண்டு.'' (பழ.) 6. நன்னிலை. ''மக்கி மணங் குலைந்து'' (இராமநா. உயுத். 81).

மணமலி=மருக்கொழுந்து. (மலை.)

மள்—மறு. ஒ. நோ : வெள்—வெறு, வெள்ளிலை—வெற்றிலை.

மறு=1. கருநிறம். 2. களங்கம். ''மதிமறுச் செய்யோள்'' (பரிபா. 2 : 30). 3. குற்றம். ''மறுவில் செய்தி மூவகைக் காலமும்'' (தொல். புறத். 20). 4. தீமை. நடுக்கடல் போனாலும் மறுப்படாமல் வரக்கடவீர். (உ. வ.) 5. அடையாளம். 6. மச்சம். ''மறுவாயிரத்தெட் டணிந்து'' (சீவக. 2). 7. பாலுண்ணி. (W.)

மறு—மறை. மறைதல் = 1. இருட்குட் புகுதல். 2. ஒளிந்து கொள்ளுதல். ''புதன்மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று'' (குறள். 274). 3. தோன்று தொழிதல். ''ஞாயிறு குடமலை மறைய'' (நற். 239).

மறைத்தல்=1. ஒளித்தல். ''மறைப்பேன்மற் காமத்தை'' (குறள். 1253). 2. மூடுதல். ''அற்ற மறைத்தலோ புல்லறிவு' (குறள். 846). 3. தீது வாராமற் காத்தல். ''குடும்பத்தைக் குற்ற மறைப்பா னுடம்பு'' (குறள். 1029).

மறை=1. மறைகை. 2. மறைவுச் செய்திகள். ''நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை'' (கலித். 133). 3. மறைக்கை. ''வெயின்மறைக் கொண்ட'' (புறநா. 60). 4. கேடகம். (அக. நி.) 5. பெண்குறி. ''அடியிலிருந்த மறைமாண்பை'' (அருட்பா, 1, இங்கித. 94). 6. களவுப் புணர்ச்சி. ''மறையல ராகி மன்றத் தஃதே'' (குறுந். 97). 7. உருக்கரந்த கோலம். ''மறைவல்லன்'' (சீவக. 2027).

8. மறைவிடம். (சங். அக.). 9. புகலிடம். "வாசவன்... .........மறை புகாது" (குற்ரு. தல. தக்கன் வேள்வி 44). 10. சிறைக்கூடம். "மறையிடை வந்து" (கந்தபு. வீரவாகு சயந். 22). 11. வஞ்சனை. "மறையிற்றன் யாழ் கேட்ட மானை யருளாது" (கலித். 143). 12. மறைபொருள் (இரகசியம்). "புறப்படுத்தா னாகு மறை" (குறள். 596). 13. மறைவாகச் செய்யும் மந்திரச் சூழ்வினை. "இராமனரு மறைக்கு" (அகநா. 70). 14. பொதுமக்கட்குத் தெரியாத மறைபொருள் கொண்ட மதவியல் அறிவுநூல். "மறைமொழி தானே மந்திர மென்ப" (தொல். செய். 176). 15. ஆரிய வேதம். "அளபிற் கோட லந்தணர் மறைத்தே" (தொல். பிறப். 20). 16. ஆரிய மெய்ப் பொருள் நூல் (உபநிடதம்). "வேதத்து மறைநீ" (பரிபா. 3 : 66). 17. ஆரியத் தொழன்மறை (ஆகமம்). "மறைமுறை யறிந்த வறிவின் கிழவரும்" (ஞானு. 35). 18. அறிவியல் நூல். "நரம்பின் மறைய வென்மனுர் புலவர்" (தொல். நூன். 33).

ஒ. நோ : கள்—கர்—கரு—கருமை, கள்—களவு, கள்—கர்—கர—கரவு.

முட்டு—முட்டி—முடி.

மாந்தரும் அஃறிணைப் பொருள்களும் மாந்தரை அல்லது அஃறிணைப் பொருள்களை முட்டுவது தலையாலேயே யாதலால், தலையும் தலைபோன்ற உச்சிப் பகுதியும் தலையிலுள்ள உறுப்பும் அணிகலமும் முடியெனப் பெயர் பெறும்.

முடி=1. தலை. "அதுவே சிவன் முடிமேற் ருன் கண்டு" (திவ். திருவாய். 2 : 8 : 6). 2. ஆடவர் உச்சிக் குடுமி. (பிங்). 3. பெண்டிர் கொண்டை போடும் ஐம்பாலுள் உச்சியில் முடிக்கும் மயிர்க்கட்டு வகை. (திவா.) 4. தலைமயிர். முடிக் காணிக்கை (உ. வ.). 5. மயிர். பன்றி முடி. (உ.வ.) 6. தலையிலணியும் மகுடம். "ஞாயிற்றணி வனப் பழைந்த... .........புனைமுடி" (பரிபா. 13 : 2). 7. மலையுச்சி. "முடியை மோயின னின்றுழி" (கம்பரா. மீட்சி. 186). 8. தேங்காய்க் குடுமி. (யாழ்ப்.)

விலங்கு மயிரையும் முடியென்றது, மயிர் என்பது இடக்கர்ச் சொல்லாகி மயிரை முடியென்னும் இடக்கரடக்கல் வழக்கெழுந்த பிற்காலத்ததாகும்.

நாற்றுமுடி, மூட்டை முடிச்சு முதலிய கூட்டுச் சொற்களிலுள்ள முடி யென்னும் சொல், வளைத்தல் அல்லது சுற்றுதல் என்பதை வேர்ப் பொருளாகக் கொண்ட வேறொரு சொல்லி

னின்று தோன்றியதாகும். அஃது அடுத்த கட்டுரையில் விளக்கப்படும்.

நட்டமாக நிற்கும் பொருள்களின் உச்சிப்பகுதி அவற்றிற்கு முடிபோன்றிருத்தலால் அது முடியெனப்பட்டது. மலையுச்சி வான முகட்டை முட்டிக் கொண்டிருப்பதாகப் பாடவும் சொல்லவும் படுதல் காண்க. மலை முடிகளுள் உயர்ந்தது கொடுமுடி.

முடி யென்னுஞ் சொல் ஒரு பொருளின் முடிவான இறுதிப் பகுதியைக் குறித்தலால், ஒருவினை முடிதலைக் குறிக்கும் வினைச் சொல்லாகவும் அஃது ஆளப்பட்டது.

"கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே" என்னும் 32 ஆம் புறப்பாட்டடியில், உச்சிக் குடுமியைக் குறிக்குஞ் சொல்லே, சோழன் நலங்கிள்ளி கருத்திற் கொண்ட முடியையுங் குறித்தல் காண்க.

முடிதல்=1. இறுதியாதல். கூட்டம் முடிந்தவுடன் தலைவர் போய் விட்டார். (உ. வ.). 2. முற்றுப் பெறுதல். இவ்விதழுடன் செந்தமிழ்ச் செல்வியின் 50 ஆம் சிலம்பு முடிகின்றது. 3. நிறைவேறுதல். "முட்டின்றி மூன்றும் முடியுமேல்" (நாலடி. 250). 4. செய்ய முடிதல், இயலுதல். குறுகிய காலத்தில் என்னால் அதைச் செய்ய முடியாது. 5. வாழ்நாள் முடிந்து இறத்தல். "கயலேர் கண்ணி கணவனொடு முடிய" (பு. வெ. 10, சிறப்பிற். 9, கொளு). 6. அழிதல். மூவேந்தர் குலமும் 16 ஆம் நூற்றாண்டொடு முடிந்து விட்டது.

ஒ. நோ: மாளுதல்=இறத்தல், செய்ய முடிதல்; இயலுதல்.

ம. முடிக. க. முடி.

முடித்தல்=1. முற்றுவித்தல். நூல் முழுவதையும் மும்மாதத்திற்குள் எழுதி முடித்துவிட்டார். (உ. வ.). 'நின்னன்னை சாபமு முடித்தென் னெஞ்சத்திடர் முடித்தான்" (கம்பரா. மிதிலை. 88) 2. நிறைவேற்றுதல். அருந்தொழில் முடியரோ திருந்துவேற் கொற்றன் (புறநா. 171). 3. அழித்தல். "சேனையை......முடிக்குவன்" (கம்பரா. மிதிலை. 98).

முடி—மடி. மடிதல்=1. சாதல். "வல்லது மடிதலே யென்னின் மாறுதிர்" (கம்பரா. அதிகா. 6). 2. அழிதல். "குடிமடிந்து குற்றம் பெருகும்" (குறள். 604).

மடித்தல்=அழித்தல். "மரனெலா மடிப்ப" (கம்பரா. தாடகை. 35).

முட்டு—மட்டு = 1. அளவு. "மட்டுப்படாக் கொங்கை மாஞர்" (கம்பர்). 2. நில அளவுவகை. 3. எல்லே. "வடிவுக் கோர் மட்டுண்டாமோ" (ஞானவா. தேவா. 1). 4. குத்து மதிப்பு. 5. அடக்கம். 6. சிக்கன அளவு. மட்டாய்ச் செலவிடு. (W). 7. ஒப்பு. 8. சிறுமை. 9. தாழ்வு. 10. குறைவு.

ஒன்ருேடொன்று முட்டுகிற நிலேயிலேயே, ஒன்றன் நீள அளவு தெரிதல் காண்க.

ம., தெ., க மட்டு.

மட்டு—மட்டம் = 1. அளவு. 2. சமநிலே. 3. அளவு கோல். 4. எல்லே. (W). 5. குத்து மதிப்பு. (உத்தேசம்) (W). 6. ஒப்பு, சமவெண். (W). 7. சிறுமை. மட்டப் பூ (S. I. I. ii, 184). 8. தாழ்வு, குறைவு. 9. அடக்கம். 10. செட்டு. 11. நடுத்தர நிலே. 12. சிறுதரக் குதிரை. 13. ஆணேக் குட்டி. (யாழ்ப்.). 14. ஒரே உயரமுள்ள நிலே. 15. வாழை, கரும்பு முதலியவற்றின் கன்று. (W). 16. மூன்ருெத்துடைய தாளம். (சிலப். 3: 151, உரை). 17. கேடகம். 18. பொன் மணியின் உறுப்பு வகை. (W).

க. மட்ட.

மட்டக்கோல், மட்டங் கட்டுதல், மட்டச் சுவர், மட்டஞ் செய்தல், மட்டத்தரம், மட்டந் தட்டுதல், மட்டநூல், மட்டப் பலகை, மட்டப்பா (மொட்டை மாடி), மட்டப்பொன், மட்டம் பார்த்தல், மட்டம் பிடித்தல், மட்டம் போடுதல், மட்ட வேலேக் காரன், மட்ட விழைப்புளி, மட்டவேலே முதலிய வழக்குச் சொற் களே நோக்குக.

இளமட்டம் = 1. குறுமட்டக் குதிரை. 2. இளம் பருவத் தோன். இளமட்டம்—இளவட்டம் = இளேஞன்.

மட்டு—மட்டி = 1. (தாழ்ந்த மதிநிலேயுள்ள) மூடன். "அறியாத.........மூடமட்டி" (திருப்பு. 195). 2. பரும்படி. 3. மட்டிக்காரை. 4. மக்கு. 5. ஒழுங்கின்மை. 6. மட்டி வாழை. (நாஞ்.).

மட்டித்தாள், மட்டித்தையல், மட்டிப் புடைவை, மட்டி வேலே முதலிய வழக்குகளே நோக்குக.

தெ., க. மட்டி (maddi).

மட்டு—மட்டை = 1. பயனற்ற—வன்—வள்—து. "இந்த மட்டைக் கிறுத்த தெல்லாம் போதும்" (விறலிவிடு. 889). 2. மட்டமான நெல். 3. மட்டமான அரிசி.

மட்டுக் கட்டுதல், மட்டுக்கு மிஞ்சுதல், மட்டுக் கோணம், மட்டுக்கோல், மட்டுத் தப்புதல், மட்டுத் திட்டம், மட்டுப் படுதல், மட்டுப் பிடித்தல், மட்டு மதிப்பு (மட்டு மரியாதை), மட்டு மதியம், மட்டு மருங்கு முதலிய வழக்குகளை நோக்குக.

முத்துதல் (முட்டுதல்)=பொருந்துதல், ஒத்தல். முத்து (முட்டு)—மத்து (மட்டு)=அளவு.

மத்து—மத்தி. மத்தித்தல்=அளவிடுதல்.

மத்தி—மதி. மதித்தல்=1. அளவிடுதல். ''மண் விழைந்து வாழ்நாள் மதியாமை'' (திரிகடு. 29). 2. கருதுதல். ''ஆடலை மதித்தான்'' (கந்தபு. திருவிளை. 1). 3. பொருட் படுத்துதல். ''மண்ணுள்வான் மதித்துமிரேன்'' (திருவாச. 5: 12). 4. ஊழ்குதல் (தியானித்தல்). ''நந்தியங் குரவனை மதிப்பாம்'' (விநாயகபு. கடவுள். 13). 5. துணிதல். ''தேர்மணிக் குரலென விவண்மதிக்குமன்'' (கலித். 126: 7).

மதி—வ. மதி, மிதி.

*OE, OS metan, OHG mezzan, ON meta, Goth. mitan, E. mete,* to measure.

மதி=1. மதிப்பு. ''நீண்மதிக் குலிசம்'' (இரகு. யாகப். 92). 2. இயற்கை யறிவு. ''மதிநுட்ப நூலோ டுடையார்க்கு'' (குறள். 636). 3. பகுத்தறிவு. ''மதியிலி மடநெஞ்சே'' (திருவாச. 5: 33). 4. அறியும் புலன் (intellect). 5. அறிவுடைமை. ''மதிமை சாலா மருட்கை நான்கே'' (தொல். மெய்ப். 7).

மதி—மதம்=1. மதித்தறிந்து கையாளும் நூல் நெறி முறை.

''எழுவகை மதமே உடன்படல் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னுட்டித் தனது நிறுப்பே
இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்டல் ஏனைப்
பிறிதொடு படாஅன் தன்மதங் கொளலே.''

(நன். பொதுப். 11)

2. அம்மை யிம்மை யும்மை (மறுமை) நிலைகளை மதித்தறிந்து கடைப்பிடிக்குங் கொள்கை. எ - டு:

சிவமதம், திருமால் மதம், கடவுண் மதம்.

முத்துதல்=பொருந்துதல், கலத்தல்.

முத்து—மத்து=கலப்பு, கலக்கம், மயக்கம், மயக்கஞ் செய்யும் பித்தம், மயக்கந் தரும் கள், தீங்கள்ளாகிய தேன், பித்தமுண்டாக்கும் ஊமத்தை.

மத்து—மட்டு=1. கள். "வெப்புடைய மட்டுண்டு" (புறநா. 24). 2. தேன். "மட்டு வாயவிழ்ந்த தண்டார்" (சீவக. 1145). மட்டுவார் குழலம்மை=மலைமகளின் பெயர்களுள் ஒன்று. 3. இன்சாறு. "கருப்பு மட்டு வாய் மடுத்து" (திருவாச. 5: 80). 4. காமக் குடிப்பு. "மட்டுடை மணமகள்" (சீவக. 98). 5. மட்டு வைக்குஞ் சாடி. "மட்டுவாய் திறப்பவும்" (புறநா. 113). 6 (தேனிற்குந் தீங்கள்ளிற்கு முரிய) நறுமணம். "மட்டு நீரெடும்" (இரகு. இரகுவுற். 28).

மத்து—மத்தம்=1. மயக்கம். "மத்தமாம் பிணி நோய்க்கு" (தேவா. 426: 3). 2. வெறி, களிப்பு. "மத்தக் கரியுரியோன்" (திருக்கோ. 388). 3. யானை மதம். (திருக்கோ. 388, உரை). 4. செடுக்கு. (உரி. நி.). 5. கோட்டி (பைத்தியம்). "மத்த மனத்தொடு மாலிவ னென்ன" (திருவாச. 5: 3). 6. கருவூமத்தை. "மத்தநன் மாமலரும் மதியும் வளர்" (தேவா. 923: 8).

மத்தம்—வ. மத்த.

மத்து—மது=1. கள். "மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல" (தொல். பொ. 114, பக். 495). 2. தேன். "மதுவின் குடங்களும்" (சிலப். 25: 38). 3. இலுப்பைப்பூ முதலியவற்றினின்று காய்ச்சி யிறக்கும் வெறிநீர். (சங். அக). 4. அமுதம். (சங். அக.). 5. அமுதம். (சங். அக.). 6. இனிமை. (அக. நி). 7. பராசம் (மகரந்தம்) (சங். அக.). 8. அதிமதுரம் (மலை).

வ. மது (madhu), *OE meodu*, *MLG mede*. *OHG metu*, *ON* mjathr, *E mead*, alcoholic liquor of fermented honey and water. *GK methu*, wine. *L mel*, honey.

மத்தம்—மத்தன். 1. மதிமயக்க மடைந்தவன். "இறந்தனர் போல வீழ்ந்த மத்தரை" (பாரத. நிரை. 102). 2. பித்தன். "மத்தனேன் பெறுமாய மலமாய" (தாயு. பொன்னை. 35.). 3. பேருக்க முள்ளவன். "பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து" (திருவாச. 153). 4. கொழுப்புள்ளவன். "மத்தனி ராவணன் கொதித்தான்" (இராமநா. உயுத். 44).

மத்தன்—வ. மத்த.

மத்து—மத்தி—மதி=மயக்கஞ் செய்யும் திங்கள். இப்பொருள் வடமொழியில் இல்லை.

ஒ. நோ. *L. luna*, moon. *L. lunaticus—E. lunatic*, insane person. *E. lunacy*, insanity.

பண்டைக் காலத்தில், நிலவொளியாற் கோட்டியுண்டாவ தாக ஒரு கருத்து உலக முழுதும் பரவியிருந்தது.

மது—மதம்=1. கள் (மது). 2. மதுக்களிப்பு. (மலைபடு. 173, உரை) 3. தேன்...''மதங்கமழ் கோதை'' (சீவக. 2584). 4. வெறி. (சங். அக.) 5. மகிழ்ச்சி. ''காதலி சொல்லிற் பிறக்கு முயர்மதம்'' (நான்மணி. 7) 6. செருக்கு. ''போரெதிர்ந் தேற்றுர் மதுகை மதந்தப'' (பரிபா. 18 : 1). 7. வலிமை. ''படிமதஞ் சாம்ப வொதுங்கி'' (பரிபா. 4 : 18). 8. காம வேட்கை மிகுதி. (திருக்கோ. 69, உரை). 9. யானைக்கடம், மதநீர் (சீவக. 2485). 10. நிலவளம். (W.) 11. காசறை (கஸ்தூரி) நறுமை. ''மாலையுஞ் சாந்து மதமு மிழைகளும்'' (பரிபா. 10 : 92). 12. கன்மதம். (தைலவ. தைல, 125). 13. வீரியம். (யாழ். அக.) 14. மிகுதி. (யாழ் அக.) 15. பெருமை. (யாழ். அக.),

மது—மதுகை=1. வலிமை. ''அனைமதுகையர் கொல்'' (குறுந் 290). 2. அறிவு. ''வானுயர் மதுகை வாட்டும்'' (சீவக. 664.)

மது—மதுங்கு. மதுங்குதல்=இனிமையாதல்.

மதுங்கிய வார்கனி. (திருமந் 2914).

மதம்—மதன்=1. கலக்கம் (யாழ். அக.) 2. மடமை. ''மதனுடை நோன்ருள்'' (திருமுரு. 7, உரை). 3. செருக்கு ''மதனுடை நோன்ருள்'' (பட்டினப். 278). 4. வலிமை, ''மத னுடை முழவுத்தோள்'' (புறநா. 50). 5. மனவெழுச்சி. ''மத னுடை நோன்ருள்'' (புறநா. 75). 6. அழகு. (பிங்.) 7. மாட்சிமை. (பிங்.) 8 மிகுதி. (யாழ். அக.)

மதன்—மதனம்=1. தேனீ. (யாழ். அக.) 2. தேன்மெழுகு (யாழ். அக.). 3. மருக்காரை. (மலை). 4. பெருமிதம். (யாழ். அக.) 5. காமம் (பிங்.). 6. புணர்ச்சி விருப்பம் (பிங்.) 7. இள வேனில் (யாழ். அக.). 8. ஒரு சாம்பல் நிறக் கடல்மீன். 9. ஒரு வெண்ணிறக் கடல்மீன்.

மதம்—மதர். மதர்த்தல்=1. களித்தல். ''மதுப்பருகிப் பருவாளை நின்று மதர்க்கு மருங்கெலாம்'' (கம்பரா. நாட்டுப். 24.) 2. மதங்கொள்ளுதல். ''மதர் விடையிற் சீறி'' (பு. வெ. 7 : 14). 3. செருக்குதல். (W.) 4. மரஞ்செடிகள் மட்டிற்கு மிஞ்சிக் கொழுத்தல். 5. செழித்தல். 6. மிகுதல். ''மதரகி மழைக்கண்'' (சீவக. 2803).

மதர்=1. யானை மதநீர் (நாமதீப. 207). 2. செருக்கு. ''அரிமதர் மழைக்கண்ணீர்'' (கலித். 77.) 3. மகிழ்ச்சி. (திவா.) 4. மிகுதி. (பிங்.) 5. வீரம். (அரு. நி.)

மதர்—மதர்வு. 1. ஆசைப் பெருக்கம். (யாழ். அக.) 2. உள்ளக்களிப்பு. (பிங்.) 3. இறுமாப்பு. 4. வலிமை. (சூடா.) 5. செழிப்பு. 6. அழகு. (சூடா.) 7. மிகுதி. (திவா.)

மதர்—மதர்வை=1. மயக்கம். ''மதர்வை வெங்கதிர் பரப்பு கிடந்தென'' (சீவக. 322). 2. களிப்பு. (பிங்.) 3. செருக்கு. ''மதர்வை நோக்கமும்'' (கந்தபு. தெய்வயா. 64.) 4. செழிப்பு. ''மதர்வைக் கொம்பு'' (சூளா. நகர. 25).

மதர்வு—மதவு=வலிமை. ''மதவுநடை நல்லான்'' (அகநா. 14.)

மதவு—மத. மதத்தல்=1. மயங்குதல். (W.) 2. களித்தல். 3. செருக்குதல். 4 கொழுத்தல். 5. காம மிகுதல். 6. மதங்கொள்ளுதல். ''மிகவும் மதத்து மதம் பொழிந்து'' (ஞானவா. திருவா. 47). மத—வ. மத.

மத=1. மிகுதி. 2. வலிமை. 3. அழகு. 4. மடமை. 'மதவே மடனும் வலியு மாகும்.'' (தொல். உரி. 79).

மதவு—மதகு—மதங்கு—மதக்கு—மதக்கம். ஒ. நோ. மயங்கு—மயக்கு—மயக்கம்.

மதக்கம்=பேருண்டி, குடி, கஞ்சா முதலியவற்றா லுண்டாகும் மயக்கம். ஆறு மதக்கத்தின லல்லவா எங்களை விழுங்காமல் விட்டிட்டது. (அவிவே. கதை). 2. களைப்பு. (யாழ். அக.).

மதமதப்பு=1. செழிப்பு (திருவிருத். 9, வ்யா. பக். 71) 2. திமிர் (W.). 3. உணர்ச்சியின்மை. (W.)

[இவ்வேர்ச்சொற் கட்டுரை முற்றிற்று.]

## தமிழின் ஒலி எழுத்துக்கள்

இத் தலைப்புடைய கட்டுரை மறைமலையடிகளாரால் எழுதப் பெற்றுக் கழக வெளியீடாகிய 'அறிவுரைக் கோவை' என்னும் நூலில் வெளியிடப் பெற்றிருக்கிறது. தமிழறிஞர் ஒவ்வொருவரும் இதனைக் கட்டாயம் படித்தல் வேண்டும்.

# 'என்பும் உரியர் பிறர்க்கு'

அன்பு இல்லாதவர் பிறர்க்கு எவ்வகையிலும் பயன்படா தவர்களாதலால் எல்லாப் பொருள்களையும் தாமே துய்த்து இன்புறுவாரென்றும் அன்பின்வழி நிற்பவர் தம்முடைய பொருள்கள் மட்டுமன்றி—தேவைப்படின் — தம்முடைய எலும்பினையும் பிறர்க்கு அளிப்பர் என்றும் ஈராயிரம் ஆண்டு களுக்கு முன்பே திருவள்ளுவர் பெருமான் கூறியுள்ளார்.

"அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு" (குறள் 72)

அறிவியல் வளராத நிலையில் ஒருவர் தம் உயிரில் பருப்பொரு ளாகத் தோன்றும் எலும்பைத்தான் கொடுக்க இயலும் என்று கருதியது இயல்பு. ஆனால் இன்று கண்களையும் சிறுநீரகங் களையும் நன்கொடையாகக் கொடுக்கலாம் என்ற நிலை வளர்ந் திருக்கிறது.

இத்தகைய சூழ்நிலையில் சென்னையில் வாழும் ஓர் இளைஞர் குறள் நெறியைப் பின்பற்றித் தமது சிறுநீரகத்தை மற்றொரு வருக்கு அளித்த செய்தியினை நாம் அறியும்பொழுது மட்டிலா வியப்பும் மகிழ்ச்சியும் அடைகிறோம்.

பி. காம். பட்டப்படிப்பினை முடித்துவிட்டு வேலைவாய்ப்பின்றி அன்றாட வாழ்க்கைக்கே வழியின்றித் தவித்துக் கொண் டிருந்தார் திரு. பி. இரவீந்திரன் இந்தர் என்னும் இளைஞர். ஒரு நாள் அவர் பம்பாயிலிருந்து வெளியாகும் வார ஏடு ஒன்றினைப் புரட்டிக் கொண்டிருந்தார். அதன்கண் ஆறு குழந்தைகட்குத் தாயான திருமதி சந்தேற்குப்தா என்பவரின் சிறு நீரகங்கள் இரண்டும் செயலற்றுப் போயின என்றும், மருத்துவமனையில் அவருடைய இன்னுயிர் ஊசலாடிக் கொண்டிருக்கிறதென்றும் ஒரு செய்தி காணப்பட்டது. சிறுநீரகம் ஒன்று கிடைத்தாலும் அவ் அம்மையார் உயிர் பிழைக்கக் கூடுமாதலால், அவருடைய கணவர் அவ்வேட்டில் 'சிறுநீரக நன்கொடை' கோரி வேண்டு கோள் ஒன்றினை விடுத்திருந்தார்.

இச்செய்தியினைப் படித்த இந்தரின் இளநெஞ்சம் உருகியது. உடனே தம்முடைய சிறுநீரகங்களுள் ஒன்றைக் கொடையாகக் கொடுப்பதென முடிவு செய்தார். உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருக்கும் அன்னையின் குருதி இனமும் இவருடைய குருதி இனமும் ஒன்றாக இருந்தமை இவருடைய

கொடை உள்ளத்திற்கு உதவி செய்யும் வகையில் அமைந் திருந்தது.

ஆனால் சென்னையிலிருந்து பம்பாய் செல்லவேண்டுமே! அதற்குரிய வழிச்செலவுத் தொகை உடனடியாகக் கிடைக்கப் பெறவில்லை. உற்றாரும் உறவினரும் உதவி செய்ய முன் வரவில்லை. மாறாக இவரை மனம் தளரச் செய்தனர். ஆனால் இந்தர் மனந்தளராமல் தம்மிடமிருந்த சில்லறைக் காசுகளைத் திரட்டிக் கொண்டு இருப்பு (ரயில்) வழி சண்டிகாரை அடைந்தார்.

அங்கே நலிவுற்றிருக்கும் அவ் அன்னையின் உறவினர்கள் இவருடைய வருகையினையும் கொடைச் செய்தியினையும் அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்து தங்கள் இல்லத்திலேயே விருந்தின ராகத் தங்கும்படி வேண்டினர். இந்தர் அதனைக் 'கொள்ளேன்' என்று கூறி விடுதி யொன்றில் தங்கிக் கொண்டார். தற்காலிகப் பணியொன்றை ஏற்றுத் தம்மைத் தாமே பேணிக் கொண்டார்.

இந்நேரத்தில் நோயாளியின் மற்றுமோர் உறவினர் ரூ. 20,000 ஐக் கையில் ஏந்திக்கொண்டு சிறுநீரகம் ஒன்று பெறு வதற்கு அரும்பாடுபட்டுக்கொண்டிருந்தார். திரு. இந்தரையும் அணுகினார். ஆனால் இந்தரோ அதனையும் 'கொள்ளேன்' என்று மீண்டும் கூறினார். தம்முடைய சிறுநீரகம் ஆறு குழந்தைகளின் அன்னையாருக்கே என்றார்.

சில நாள்களில் அறுவை மருத்துவம் நடைபெற்றது. இந்தர் சிறுநீரகங்களுள் ஒன்று திருமதி சந்தேற்குப்தா அவர்கள் உடலுக்கு மாற்றப்பட்டது. இதன் விளைவாக இளஞ் சிறார்கள் நிறைந்த அக் குடும்பத்தில் புத்தொளி வீசத் தொடங் கியது.

ஈராயிரம் ஆண்டுகட்குமுன் திருவள்ளுவர் குறளை இயற்றும் பொழுது இத்தகைய இளைஞர்கள் தமிழகத்தில் வருங்காலத்தில் தோன்றுவார்கள் என்று கருதித்தானோ என்னவோ 'அன்புடை யார் என்பும் உரியர் பிறர்க்கு' என்ற அடிகளை அப்போதே தமது திருக்குறளில் அமைத்துவைத்தார் போலும்.

இந்தரின் பயன்கருதா இக்கொடைச் செய்தி நாடெங்கும் பரவிற்று. ஹரியானா முதல்வர் இந்தருக்கு ரூ. 1,001 நன் கொடை அளிக்க முன்வந்தார். அதனையும் 'கொள்ளேன்' என்று கூறியதோடு அத்தொகையினை இந்தியத் தலைமை அமைச் சரின் நிதிக்கு அளித்துவிடுமாறு கேட்டுக்கொண்டார்.

திரு. இந்தருக்கு அவர் தகுதிக்கேற்றவாறு அரசுபணி ஒன்று அளிக்க மாநில முதல்வர் முன் வந்தார். அதன் பொருட்டு இவரைப் பொறுத்தவரை எல்லாச் சட்டங்களுக்கும் விதிகளுக்கும் விதிவிலக்கு அளித்தார். அப்போதும் இந்தர் மனம் மாறவில்லை; 'கொள்ளேன்' என்றே உறுதியாகக் கூறினர்.

இதனைத் தொடர்ந்து பெருமக்களுள் பலரும் பல நிறுவனங் களும் நன்கொடையளித்தனர். அவற்றை அன்புடன் ஏற்றுக் கொள்ளுமாறு மைய அமைச்சர்கள் மாண்பமை ஜகஜீவன்ராம் அவர்களும் மாண்பமை டாக்டர் கரன்சிங் அவர்களும் இந்தரைக் கேட்டுக் கொண்டனர். அவர்தம் வேண்டுகோள்களையும் ஏற்காமல் 'கொள்ளேன்' என்ற கொள்கையினையே கடைசி வரையில் கடைப்பிடித்தார்.

தமிழகத்திற்குத் திரும்பி வந்து ஒரு ப்ளாஸ்டிக் தொழிற் சாலை நடத்தத் திட்டமிட்டுள்ளார் திரு. இந்தர்.

திரு. இந்தருடைய போக்கினையெல்லாம் உற்றுநோக்கும் பொழுது 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்ற திருவள்ளுவர் நெறியில் நின்றதோடல்லாமல் மறவர் தன்மை யிலேயே வீறு நடைபோடுகிறுர் அவர்என்பதும் தெரியவரும்.

*"கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்*
*கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று"* (புறம். 204)

என்னும் புறநானூற்று அடிகள் நம் நினைவுக்கு வருகின்றன.

ஒருவர் 'இதனைக் கொள்வாயாக' என்று சொல்லித் தாமே கொடுக்க முன்வருதல் உயர்ந்த செயல். அவ்வாறு கொடுப் பதனையும் 'கொள்ளே'னென்று சொல்லி மறுத்தல் அக்கொடை யினும் உயர்ந்தது என்பது பாடலின் கருத்து.

'கொள்ளென'த் தம் சிறுநீரகத்தைக் கொடுத்து உயர்ந்து நின்றுர் இந்தர். தமக்குக் கிடைக்கவிருந்த பெருந்தொகை யினையும் அரசு அளிக்க முன் வந்த நன்கொடையினையும் பணி வாய்ப்பினையும் 'கொள்ளேன் கொள்ளேன்' என்றே சொல்லி மறுத்து மேலும் உயர்ந்து நின்றுர் இந்தர்.

வாழ்க அவர் பேருள்ளம்! வாழ்க அவர் புகழ்!

இரா. கல்யாணசுந்தரம்

# புதல்வன் தாய்

[டாக்டர். சொ. சிங்காரவேலன், எம்.ஏ., பிஎச்.டி.,

*தமிழ்த்துணைப் பேராசிரியர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.]*

பாவலன் கைவண்ணம் :

நல்ல கவிதைகளை ஒருமுறை படிக்கும்போதே நாம் நம்மை இழந்து விடுகின்றோம். கவிதை எழுப்பும் கற்பனையுலகில் உலவத் தொடங்குகின்றோம். கவிஞன் பயன்படுத்தியுள்ள சொற்கள் கருவியாக நாம் கவிஞன் படைக்கும் உணர்வுலகத்திற்குள் நுழைகின்றோம். சொற்களில் நாம் அறிந்தவற்றையே பயன்படுத்தினாலும், அவை பாவலன் கைவண்ணத்தில் சுடர் வீசிப் பொலிகின்றன.

ஆடிப்பாவை :

காதற்பரத்தை ஒருத்தி பேசுவதாக ஒரு கற்பனை. அவளுக்குரிய தலைவனுடைய மனைவி தன்னை இகழ்ந்து பேசிவிட்டாள் என்று அறிந்து சினங்கொண்ட நிலையில் அவள் பேசுவதாகக் கூற்றை அமைத்துக் கொள்கின்றார் ஆலங்குடி வங்கனார் என்ற சங்க காலப் புலவர். "தலைவன் எமக்கு வயப்பட்டாற்போல் இங்கே இருந்து, தலைவியினிடத்துச் சென்றதும் அவளுக்கு அடங்கியவனாய் அவளுடைய மனத்திற்கேற்ப வாழ்கின்றான். செருக்குற்று அவள் இகழ்ந்தமைக்குக் காரணம் அதுவே" என்று முடிக்கின்றாள். இதை அழகுபட உரைக்கும் கவிஞனின் வித்தகத்தை வியக்காமலிருக்க வியலவில்லை.

தலைவன் இருக்கின்ற ஊரில் ஒரு காட்சி. வயலருகே உள்ள மாமரத்தில் இனிய கனிகள் பழுத்துள்ளன; நன்கு முதிர்ந்த கனிகள். அவை தாமே கீழே உதிர்கின்றன. ஓரத்துப் பொய்கையிலே உள்ள வாளைமீன்கள் கவ்வி உண்ணுதற்கு வாய்ப்பாக அவை வீழ்கின்றன. அத்தகைய ஊர் அது. பலவகை இன்பங்களும் வருந்தாது பெறுவர் அவ்வூர் மக்கள் என்ற குறிப்புடைய செய்தியாக இதனைக் கொண்டனர் பேராசிரியர், ("பலவகை இன்பமும் வருந்தாது பெறுவரென்பதனைப் புலப்படுத்தி நிற்றலின் இனிதுறு கிளவி பற்றி உள்ளுறையுவமம் தோன்றியது"—தொல்காப்பியம்—உவமவியல்—28ஆம் நூற்பா—பேராசிரியர் உரை) அவ்வாறே தலைவனும் எளிமையாக இன்பம் நுகரும் வாய்ப்பினைப் பெற்றுவிட்டான் என்பதையும், அவனது "இன்பத்துறைக்கு எளியளாக"த்தான் இருந்தவாற்றையும் பரத்தை குறிப்பாகத் தெரிவித்து விடு

கின்றாள் இந்தப் பகுதியால். ''எம்முடைய மனையில் எம்மை வயமாக்குதற்கு உரிய பெருமொழிகளைக் கூறிச்சென்று, தன்னுடைய மனையில் தன்னுடைய மனைவிக்கு அவள் விரும்பியவற்றைச் செய்து வருகின்றான்'' என்கின்றாள் அடுத்து. இதற்கு ஓர் அழகிய உவமையைப் படைக்கின்றாள். கண்ணாடிக்கு முன் னின்று கையும் காலும் தூக்கத் தானும் அவ்வாறே தூக்குகின்ற கண்ணாடிப் பாவைபோலத் தலைவி சொல்லியவாறெல்லாம் செய் கின்றான் என்று சினத்துடன் மொழிகின்றாள்.

புதல்வன் தாய்:

தலைவியைத் தலைவனுக்கு மனைவி என்று சொல்லவும் தயங்குகின்றாள் ஆதலின், ''புதல்வன் தாய்'' என்ற சொற்களாற் குறிக்கின்றாள்; அல்லது ஒரு குழந்தையைப் பெற்றவள் என்று அவளுடைய முதுமையைச் சுட்டி இகழ்ந்ததாகவும் இக் குறிப்பைக் கொள்ளலாம். எவ்வாறேனும், 'புதல்வன்' என்ற சொல்லும், 'தாய்' என்ற சொல்லும் இவ்விடத்தே இணைந்து அவள் அடிமனத்தின் ஆழ்ந்த உணர்ச்சியைக் காட்டுவனவாக அமைகின்றன. ஆலங்குடி வங்கனார் படைத்துள்ள இவ் வுணர்ச்சியோவியம் இது:

> ''கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
> பழன வாளை கதூஉம் ஊரன்
> எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
> கையுங் காலுந் தூக்கத் தூக்கும்
> ஆடிப்பாவை போல
> மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே.''

சிறுவன் தாய்:

தோழி கூற்றாகப் பிறிதொரு பாட்டில், இதே கவிஞர் படைத்துள்ள கற்பனையில், ''சிறுவன் தாய்'' என்று ஓர் அழகிய தொடர் காணப்படுகின்றது:

> ''காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
> வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
> மல்ல லூரன் எல்லினன் பெரிதென
> மறுவருஞ் சிறுவன் தாயே
> தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே''.

இங்குச் ''சிறுவன் தாய்'' என்ற தொடர், ''புதல்வன் தாய்'' என்ற தொடரோடு ஒத்த கருத்தினதே ஆயினும், தலைவியினது தாய்மைப் பெருமையைக் காட்டும் சிறப்புடையதாகக் கொள்ளுமாறு அமைந்துள்ளமை காணலாம்.

வேறு உணர்ச்சி :

இச் சொற்களையே (புதல்வன், தாய்) வேறு வகையான உணர்ச்சியை விளக்கவும் பயன்படுத்தக்கூடிய பிறிதொரு பாட்டைக் குறுந்தொகையிலேயே காணலாம். பேயன் என்ற பெருந்தகை பாடக் கூடிய பாட்டு அது. தோழியின் கூற்று அங்கே மலர்கின்றது இவ்வாறு. தலைவனுக்கும் தலைவிக்கும் ஊடல் நிகழும் நிலை தலைவியின் தோழியை நெருங்கித் தன்நிலை கூறித் தலைவியின் ஊடற்குறிப்பை நீக்கி உதவுமாறு தலைவியின்மீது வைத்த ஆராக் காதல் அடிப்படையாகக் கேட்டுக்கொண்டான் தலைவன். தோழி மறுத்து விடுகின்றாள். தலைவியின் சினக் குறிப்பை மாற்றும் நிலையில் தான் இல்லாமை கூறித் தன்னுடைய இயலாமையைத் தெரிவித்துவிட்டாள். 'வாயின் மறுத்தல்' என்று இது கூறப்படும். வேறு வழியின்றித் தானே மனையிற் புகுந்து தலைவியை நெருங்க முற்படுகின்றான் தலைவன். இந்தக் காட்சியைப் பாணனிடம் தோழி கூறுவதாகப் பாட்டு விரிகின்றது.

"மாலைக் காலத்து இளைய நிலா வொளி வீசிக் கொண்டிருக்கும் இனிய பொழுது அது. குறுகிய கால்களைக் கொண்ட அழகிய கட்டிலின்மீது விரிக்கப்பட்டிருக்கின்றது பூம் படுக்கை. அதில் தன்னுடைய மகன் கிடப்பக் கண்டு அன்பினோடு சென்று படுத்தலையுடைய யானையைப் போலப் பெரு மூச்சு விட்டுத் தழுவிக் கொள்கின்றான் தலைவன். தலைவி தன் ஊடற்குறிப்புத் தவிர்ந்து, நெஞ்சு நெகிழ்ந்து அவனுடைய முதுகுப்புறமாகச் சென்று தழுவிக்கொண்டு மகிழ்கின்றாள்" என்று கூறி முடித்த தோழி, "பாண! பண்புடைய இதனைக் காண்க" என்றாள். இங்கு இக் காட்சியைக் காட்டுங்கால், "புதல்வன் தாய்" என்ற தொடரால் தலைவியைத் தோழி குறிப்பதாகக் கவிஞர் அமைக்கின்ற திறம் காண்டற்குரியது. வாயின் மறுக்கப்பட்ட நிலையில் தானே தலைவன் சென்று தழுவிடத் தலைவி ஊடல் தீர்ந்தமை அவளுடைய உயர்ந்த கற்பியற் பண்பினைக் காட்டுகின்றது என்று குறித்த அழகு உணரத்தக்கது. 'புதல்வன் தாய்' என்ற தொடர் இங்கு, அன்பின் பிணைப்பினையும், அப் பிணைப்பிற்குப் பெருஞ்சான்றாய் உள்ள குழந்தைச் செல்வத்தின் மாண்பையும் விளக்குவதாக அமைந்திருத்தல் அறியத்தக்கது.

ஒரேவகையில் அமைந்த சொற்கள்தாம். ஆனால், ஓரிடத்து உயர்வு குறித்ததாகவும், பிறிதோரிடத்து இழிவு குறித்ததாகவும் அமையுமாறு அத் தொடர் அமைந்துள்ள திறம்

குறித்து நோக்கற்குரியது. சொற்களை எவ்வாறெல்லாம் புலவர்கள் கருத்திற்கேற்ற வண்ணத்திற் கையாண்டுள்ளார்கள் என்று அறிய இச் சான்று இனிது பயன்படும்; பேயனார் படைத்த இக் கவிதை வருமாறு :

> "கண்டிசிற் பாண! பண்புடைத் தம்ம
> மாலை விரிந்த பசுவெண் ணிலவிற்
> குறுங்காற் கட்டில் நறும்பூஞ் சேக்கைப்
> பள்ளி யானையின் உயிர்த்தனன் நசையிற்
> புதல்வற் றழீஇயினன் விறலவன்
> புதல்வன் தாய் அவன் புறங்கவை யினளே."

பேயார் ஐங்குறு நூற்றில் (409) இதே கருத்துடன் இயற்றிய பாட்டிலும் இத் தொடர் இடம் பெற்றுள்ளது :

> "புதல்வற் கவையினன் தந்தை மென்மொழிப்
> புதல்வன் தாயோ இருவருங் கவைஇயினள்
> இனிது மன்றவர் கிடக்கை
> நளியிரும் பரப்பின் இவ் வுலகுட னுறுமே."

'இக் காட்சி காண இனியது' என்றும், 'இந்த உலகமெல்லாம் ஒரு நிறையாகக் கொண்டாலும் இதற்குத் தகும் என்று உரைக்கலாம்' என்றும் பாராட்டுகின்ற திறம் உடையது இக் கற்பனை.

**உயர்ந்த பண்பு :**

தலைவனுடைய பிழையை மறந்து ஊடல் நீங்கி அவனைத் தழுவி மகிழ்கின்ற தலைவியின் உயர்ந்த பண்பு உன்னுந்தோறும் உவகை தருவது. தாய்மைப்பேறு எய்தியவளாக இருத்தலின் இத்தகைய பொறையுடைமை இயல்பாயிற்று என்ற குறிப்பையும் கூடப் "புதல்வன் தாய்" என்ற தொடர் காட்டுவதாகக் கருதலாம். இவ்வாறு சங்கப் புலவர்கள் 'ஆராய்ந்த சொல்வன்மை' உடையவர்களாக விளங்கியமைக்கு எண்ணற்ற சான்றுகளைக் காட்டலாம்.

---

## பாட்டும் உரையும்

"பாட்டெல்லாம் அறிவுநிலையைப் பற்றிக்கொண்டுபோய் உயிர்களின் உணர்வு நிலையை எழுப்பி விடுவதாகும். உரையெல்லாம் அறிவுநிலையைப் பற்றியே நிகழுமல்லது அதன்மேற் சென்று உணர்வு நிலையைத் தொடமாட்டாதாகும்."

—மறைமலையடிகள்
(பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை, பக். எ)

# சங்க இலக்கியத்தில் கள்ளரின் வளைதடி

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

முக்குலத்தோரில் கள்ளரும் மறவரும் சிறுவிலங்குகளை வேட்டையாட வளைதடி, வளரி என்ற கருவியைப் பயன்படுத்தினர். ஓரிரு நூற்ருண்டுகளுக்கு முன்னர் இக்கருவியைப் பயன்படுத்துவதை விட்டு விட்டனர் என்று டாகடர் ஒப்பர்ட் (Dr. Oppert) என்ற வெளிநாட்டு ஆராய்ச்சியாளர் எழுதியுள்ளார். இந்த வளைதடியால் முயல், மான் முதலிய சிறு விலங்குகளை எளிதில் வேட்டையாடிக் கொல்லமுடியும். இந்த வளைதடியை வீசி ஆளையும் கொல்லலாம் என்று கூறுவர். பாளையக்காரரின் படையிலிருந்த மறவரும் கள்ளரும் வளைதடியைப் படைக்கருவியாகப் பயன்படுத்தினர் என்று வரலாற்று ஆசிரியர்கள் எழுதியுள்ளனர். ஒருவன் வளரியால் கொல்லப் பெற்ருல் வளரி வீசியவனைப் பிடித்துக் கொல்லவேண்டும் என்று விரையாச்சிலைக் கல்வெட்டு கூறுகிறதாக சோமலெ எழுதியுள்ளார். வளைதடி ஏறக்குறைய பிறைவடிவமாக இருக்கும். ஒரு முனை மிகவுங் கனமாக இருக்கும். வளைதடியின் ஓர் ஓரம் கூர்மையாக இருக்கும். வளைதடியின் கனமற்ற நுனியைப் பிடித்துக்கொண்டு வீசி எறிவர். வளைதடிகளை இன்றும் கள்ள இனத்தாரிடையே பழைய குடும்பங்களில் காணலாம். இதைச் சில சடங்குகளில் பூசைக்குரிய பொருளாகவும் கள்ளர் பயன்படுத்துகின்றனர். வளைதடியை அனுப்பிப் பெண்ணைக் கொண்டுவருவது என்ற வழக்கம் கள்ளரிடையே இருந்தது. திருமணத்திற்கு முன் வளைதடியை இரு வீட்டாரும் மாற்றிக்கொள்வதுண்டு. “மறவர் கொடுப்பது வளரிப் பிரசாதம்” என்ருெரு பழமொழி உண்டு. இது போன்ற வளைதடியைப் பயன்படுத்தும் பண்டைக் குடி உலகத்திலேயே ஆஸ்திரேலியாவில் தான் இருக்கிறதாக மன்பதை ஆராய்ச்சி அறிஞர்கள் (Anthropologists) கூறுவர். ஆஸ்திரேலியாவில் உள்ள நாகரிகம் அடையாத மிகப் பழங்குடிகள் பூமெராங்க் (Boomerang) என்ற ஒரு வகை வளைதடியைக் கொண்டு சிறு விலங்குகளை இன்றும் வேட்டையாடுகின்றனர். வளைதடியை எவன் வீசுகின்ருனே அவன் கையில் அதே வளைதடி திரும்ப வந்து சேரும் என்று கூறுகின்றனர். முற்பகல் கேடு சூழ்வானுக்குப் பிற்பகல் கேடு நேர்வதை (boomerang) என்ற பழங்குடி மக்களின் சொல்லால் குறிப்பிடுவது ஆங்கில மொழி

யில் வழக்காகி விட்டது. மறவர், கள்ளர் பயன்படுத்திய வளை தடியைச் சங்க நூல்கள் குறிப்பிட்டுள்ளன. என்றால் வியப்பாக இருக்கும். ஐங்குறுநூற்றில் வளைதடியைப்பற்றி ஒரு குறிப்பு உள்ளது.

"மாலை வெண்காழ் காவலர் வீச
நறும்பூம் புறவி னொடுங்குமுய லிரியும்" —ஐங்குறுநூறு, 421.

வளைந்த வெண்காழையுடைய தடியை முயல்மேல் காவலர் வீசியதும் புறவில் ஒடுங்கின முயல் நீங்கினதாக ஐங்குறுநூறு கூறியுள்ளது. மாலை என்ற சொல் மாலைபோல வளைந்த என்ற பொருள் தரும். காழ் என்பது உறுதியுடையதைக் குறிக்கும். வளைதடியை வைரம் பாய்ந்த மரத்தால் செய்வர். ஆதலின் காழ் என்பது உறுதி வாய்ந்த மரத்தைக் குறிக்கலாம். வளைதடியை யானைத் தந்தத்தாலும் செய்வதுண்டு. ஆதலின் 'வெண்காழ்' என்று சொல்லியிருப்பதால் இந்த வளைதடி யானைத் தந்தத்தால் செய்யப்பட்டதாகவே இருக்கலாம்.

சென்னைப் பொருட்காட்சி சாலையில் யானைத் தந்தத்தால் செய்யப்பெற்ற இரண்டு வளைதடிகள் உள்ளன. வளைதடியை இரும்பினாலும் செய்வதுண்டு. பெரும்பாணாற்றுப்படையில் "நோன்காழ் இரும்பு" (90—91) என்றும், "குறுங்காழ் உலக்கை" (97) என்றும் சொல்லியிருப்பதிலிருந்து 'காழ்' என்பது இரும்பையும் மரவைரத்தையும் குறிக்கும் என்பதை அறியலாம். ஐங்குறுநூற்றில் சொல்லப்பட்ட 'மாலை வெண் காழ்' என்பது யானைத் தந்தத்தால் செய்யப்பட்ட வளைதடி என்றே எண்ண வேண்டும். மாலை வெண்காழை வீசியவர் காவலர் என்று ஐங்குறுநூறு கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். காவலர் என்பார் ஊர்க்காவலை மேற்கொண்டவ ராவர். மறவரும் கள்ளரும் ஊர்க்காவலராக இருந்த வழக்கம் ஆங்கிலேயர் இங்கு ஆட்சி செய்ய வருவதற்கு முன்னர்வரை, தெற்குத் தமிழகத்தில் தொன்றுதொட்டு இருந்து வந்ததை எட்கார் தர்ஸ்டன் என்ற ஆராய்ச்சியாளர் குறிப்பிட்டுள்ளார். ஐங்குறுநூற்றில் கூறப்பட்ட காவலர் மறவர், கள்ளர் இனத்தாராகவே இருக்கலாம். அண்மைக் காலம் வரை கள்ளரினத்தாரே களவு செய்து வந்ததும் அதோடு ஊதியத்திற்காகப் பிறர் களவு செய்யாதபடி ஊராரைக் காப்பாற்றிக் காவலராக இருந்ததும் கவனிக்கத்தக்கது. ஆதலின் சங்ககாலத்தில் மறச்செயலில் ஈடுபட்ட மறவரே ஊர்க்காவலராகவும் இருந்திருப்பர் என்பதில் ஐயமெழுவதற்கில்லை. இந்தக் காவலர் வழி வந்த மறவரும் கள்ளரும் அண்மைக்காலம்வரை வளைதடி

யால் முயல் முதலிய சிறுவிலங்குகளை வேட்டையாடி இருக்கின்றனர் என்பதைக் கவனிக்க வேண்டும்.

ஐங்குறுநூறு 'மாலை வெண்காழ்' என்றழைத்த வளைதடியையே 'குணில்' என்று வேறொரு ஐங்குறுநூற்றுப் பாடலும் சிலப்பதிகாரமும் கூறுவதாகத் தெரிகின்றது.

> "பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்
> கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்" —ஐங்குறுநூறு, 87

> "கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்"
> —சிலம்பு, ஆய்ச்சியர்குரவை,

குணில் என்றது வளைதடியே என்று கருத இடமிருக்கின்றது. குணில் என்ற சொற்குப் பொருள் குறுந்தடி என்று கூறப்பட்டுள்ளது. குணில் என்ற சொல்லே வளைவு என்ற பொருளைத் தரும். குணக்கு, குணலைக்கூத்து ஆகிய வழக்குகளில் 'குண' என்ற வேர்ச்சொல் வளைவுப் பொருளைத் தரும். ஆதலின் குணில் வளைவான குறுந்தடியைக் குறிக்கும். 'குணிலே குறுந்தடி' என்று சேந்தன் திவாகரம் கூறியுள்ளது. திவாகரத்தில் கடிப்பிற்கும் குணில் என்ற பெயர் கூறப்பட்டுள்ளது. 'குணில்வாய் முரசு' என்று குறுந்தொகையில் இந்தக் கடிப்பு கூறப்பட்டுள்ளது. கரும்பை வளைதடி போலப் பயன்படுத்தி மாங்கனியை உதிர்த்ததை ஐங்குறுநூறும் மேய்கின்ற பசுவின் கன்றையே குறுந்தடியாகக்கொண்டு கனியை உதிர்த்ததைச் சிலப்பதிகாரமும் கூறியுள்ளன. குறுந்தடியைக் குறுங்கோல் என்று புறநானூறு கூறியுள்ளது.

> "குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுயல்" —புறம், 339.

நெடுஞ்செவிக் குறுமுயலைக் கொல்ல, குறுங்கோலை எறிந்ததாகப் புறநானூறு கூறியதைக் கவனிக்க வேண்டும். இந்தக் குறுங்கோலும் வளைதடியாகவே இருக்க வேண்டும். வெறுங் குறுகிய கோலை எறிந்து முயலைக் கொல்லுவது இயற்கையில் முடியாத செயலாகும். ஆதலின் இங்குக் கூறப்பட்ட குறுங்கோல் சிறப்புப் பெயராக வளைதடியையே குறிக்கும் என்பதை உணர வேண்டும். ஐங்குறுநூற்றில் மாலை வெண்காழைக் கொண்டு முயலை எறிந்த செய்தி கூறப்பட்டுள்ளது. குறுங்கோல் என்பதற்குக் குறுந்தடி என்று பொருள் கூறுவர். குணில் என்பதற்கும் குறுந்தடி என்று பொருள் கூறுவர். ஆனால் குறுங்கோலும், குணிலும் சிறப்புப் பெயர்களாக இடத்திற்கேற்ப வளைதடியையே குறிக்கும் என்று கருதலாம். சிறுகோல் என்ற சொல் சிறிய கோல் என்று பொதுவாகப் பொருள் தரி

னும் குதிரையோடு சேர்த்துக் கூறும் புறநானூறு, நற்றிணை, முதலிய சங்கப் பாடல்களில் சிறப்பாகக் குதிரைச் சாட்டையைக் குறித்து வழங்கினதை இது சார்பாக நினைவு கூர வேண்டும்.

"சிறுகோ லுளையும் புரவி..............." —புறம், 352.

"சிறுகோற் சென்னியா ரேற்றன்ன"........... —நற்றிணை, 265.

பரணர் பாடிய இந்த இரு பாடல்களிலும் சிறுகோல் என்ற சொல் குதிரையை விரையச் செலுத்தும் முட்கோலைக் குறித்தது என்று அறிஞர் பொருள் கூறுவர். நாய்கரும் மணியகாரரும் குதிரை மேலிருந்து கோல்தா என்றால் மத்திகைக் கோலாம், சுள்ளற் கோலாம் என்று இளம்பூரணர் கூறிய உரையையும் இது சார்பாக எண்ணிப் பார்க்க வேண்டும். ஆதலின் குறுங்கோல், குணில் என்பன வளைதடியையும் சிறப்பாகக் குறிக்கும் என்பதை உணர வேண்டும். இதுவரை கூறிய விளக்கத்திலிருந்து முயலை எறிவதற்குப் பயன்படுத்தப்பட்ட மாலை வெண்காழ், குறுங்கோல், மற்றும் மாங்கனியை வீழ்த்தப் பயன்படுத்தப்பட்ட குணில் ஆகியவை வளைதடி என்றே கருத வேண்டும்.

"வெல்போர்க் கவுரியர் நன்னாட் டுள்ளதை
மண்கொள் புற்றத் தருப்புழை திறப்பின்
ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்
ஏவல் இளையர் தலைவன் மேவார்
அருங்குறும் பெறிந்த ஆற்றலொடு பருந்துபடப்
பல்செருக் கடந்த செல்லுறழ் தடக்கைக்
கெடாஅ நல்லிசைத் தென்னன் றொடா" —அகம், 342.

"உருமெனச் சிலைக்கும் ஊக்கமொடு பைங்கால்
..............................
கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான்
மழபுலம் வணக்கிய மாவண் புல்லி
விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்" —அகம், 61.

அகநானூறு 342ஆம் பாட்டில் கள்வர் பெருமகனும் அவனுடைய ஏவலைச் செய்யும் இளையர் தலைவனும் ஆகியவனின் குறும்பை ஒழித்த தென்னவனின் செய்தி கூறப்பட்டிருப்பதால் கள்வர் என்று சங்க காலத்தில் அழைக்கப்பட்ட கள்ளர் அக்காலத்திலேயே தென் தமிழ் நாட்டில் இருந்தனர் என்று கருதலாம். மிகப் பிற்காலத்தில் தஞ்சையிலிருந்து ஆண்ட மராட்டிய அரசைக் கள்ளர் இனத்தார் ஆட்டிப் படைத்ததை இது சார்பாக நினைவு கூரலாம். கள்வர் கோமான் என்றழைக்

கப்பட்ட புல்லி வேங்கடமலையில் இருந்து ஆண்டான் என்று அகநானூறு 61ஆம் பாட்டு குறிப்பிட்டுள்ளது. இந்தக் கள்வர்கோமான் மழநாட்டை வென்றதும் கூறப்பட்டுள்ளது. கள்ளர் இனத்தார் வடக்கே இருந்து தமிழகத்துக்கு வந்தவ ரென வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றனர். கள்ளர் வேங்கடத்திலும் தொண்டை நாட்டிலும் இருந்து தெற்கே, சென்றவராகக் கருதுவர். புதுக்கோட்டை அரசர் கள்ளர் மரபினராயினும் தொண்டைமான் என்று சொல்லிக் கொள் வதைக் காணலாம். தெலுங்கு மொழியில் 'களெனு' என்று வழங்கும் சொல் போரையும் பூசலையும் குறிப்பதாகக் காட்டி யுள்ளனர். 'கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த' என்று வரும் அகநானூறு 91ஆம் பாட்டு வரியில் 'களவுழ' என்ற சொல் போர் புரிய என்று பொருள் தருவதைக் காணலாம். மழவர் ஒரு போர் வீரர் என்று அகநானூற்றுப் பழைய உரை கூறு கின்றது. புல்லி என்ற கள்வர் கோமான் மழநாட்டை வென்ற தாகக் கூறியிருப்பதைக் கவனிக்க வேண்டும். கொங்கு வேளாளரில் ஒரு கிளைக்கு இன்றும் புல்லி என்ற பெயர் இருப் பதையும் கவனிக்க வேண்டும். கள்ளர் வகுப்பினர் மழ நாட்டிலும் பாண்டி நாட்டிலும் சங்க காலத்திலேயே குடியேறி யிருந்தனர் என்று கருதலாம். இந்தக் கள்ளரே சிறப்பாக வளைதடியைப் பயன்படுத்தி யிருக்கின்றனர் என்று தெரி கின்றது.

---

## ஆராய்ச்சி அறிவே அறிவு

பண்டைக்கால மக்கள் அஞ்ஞான்றிருந்த பெரிய கொடிய வேங்கைப் புலிகட்கும் பேரியானைகட்கும் வலிய மலைப்பாம்பு கட்கும் வன்பெரு முதலைகட்குந் தப்பிப் பிழைத்தனர். அவைகளுக் கஞ்சித் தம்மைக் காத்துக்கொள்ள வழிதேடும் முயற்சியினாற்றான் ஆராய்ச்சியறிவு விளங்க ஐயறிவுடைய மாக்களாய் முதலில் விலங்கினங்களை ஒத்திருந்த மாந்தர், பின் னாளேற நாளேற ஆராய்ச்சியறிவு மிகுந்து, அதனால் ஆறறி வுடைய மக்களாயினர். இதனாலன்றோ தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார், ஆராய்ச்சி அறிவையே அறிவெனக் கருதி,

> "அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
> என்னுடைய ரேனும் இலர்"

என்றருளிச் செய்தார்.

—மறைமலையடிகள்

"இளைஞர்க்கான இன்றமிழ்"

பக். ௧௨௫—௧௨௬.

# பனங்குடை

[நெல்லை. ந. சொக்கலிங்கம், எம்.ஏ.,

ம. தி. தா. இந்துக்கல்லூரி, நெல்லை-10.]

## பல்வகைப் பெயர்கள் :

பனையின் அருமையினையும் பெருமையினையும் இன்று மக்கள் அறிந்திருப்பதனைப் போன்றே சங்ககால மாந்தரும் நன்கு அறிந்திருந்தனர். மேலும் பனைபடு பொருள்களைத் தங்கள் வாழ்விலும் பயன்படுத்தியுள்ளனர். எப்படியெல்லாம் பனையோலையை மட்டும் பயன்படுத்தினர் என்று சங்க இலக்கியச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு பார்ப்போம். அவ்வாறு அறிவது அக்கால மக்களின் பழக்க வழக்கத்தினை உணர்த்தும். அது சமூகவியலின் பால் படும். பனையோலையைப் பண்டைத்தமிழர் உண்கலமாகப் பயன்படுத்தியும் பிற பொருள்களைப் பாதுகாப்பாகப் பொதிந்து வைத்தும் வாழ்ந்த பாங்கினைக் காண்போம். இப்பனையோலையினால் ஆகிய கலத்தினை, ''பனங்குடை, இரும்பனங்குடை, பனம் பசுங்குடை, வெண்குடை, குடை, குடைகலன்'' எனவெல்லாம் பல்வேறு பெயரிட்டு வழங்கியுள்ளனர்.

## பனங்குடையின் பொருள் :

இலக்கிய உரையாசிரியர்கள் எடுத்து மொழியும் பொருளைக் காணுமுன், தமிழ் அகரவரிசை கூறும் பொருளைக் காண்போம். 1. சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி சோறு, பதநீர் முதலியவற்றை வைப்பதற்குரிய கலம் என்கிறது. 2. 'பனங்குடை - பனையோலையாற் செய்யப்பட்ட உண்கலம்'' என்று குறிப்புரையும், 3. ''குடை - உட்குழிவாகப் பனையோலையால் அமைக்கப்பட்ட தொரு கருவி'' என்று விரிவுரையும் எழுதுகின்றார் டாக்டர். உ. வே. சா. 4. ''பனையினது பச்சோலையால் உட்குடையதாகச் செய்யப்படுவது பனங்குடை. உணவுண்டற்கும் பூப்பறித்தற்கும் மக்கள் பயன்படுத்துவர்'' என்று ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை குறிப்பிடுகின்றார். இவ்வாறே நற்றிணை நாராயணசாமி ஐயரும், ந. மு. வேங்கடசாமி நாட்டாரும் உரைக்கின்றனர். ஆக, பனையோலையை உள்ளே குழிவாக இருக்குமாறு பின்னிய ஒன்றைப் பனங்குடை என்றனர் என்பது தெளிவாகின்றது.

**சங்க நூல்களில் பனங்குடை :**

மக்கள் பழக்கத்தில் இருந்துவந்த பனங்குடை, இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளமையினைக் கீழ்க்காணும் பல்வேறு சங்க நூல்களின் அடிகளால் உணரமுடிகிறது. அவை வருமாறு :

5. "மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
 இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து"

6. "ஆறுசென் மாக்கள்
 சோறுபொதி வெண்குடை"

7. "பலகுடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி"

8. "வேணீர் உண்ட குடையோ ரன்னர்"

9. "அவல் வகுத்த பசுங்குடையாற்
 புதல்முல்லைப் பூப்பறிக் குந்து"

10. "பைஞ்சிணம் பெருத்த பசுவெள் ளமலை
 வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
 இரும்பனங் குடையின் மிசையும்
 பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே"

எனச் சங்க நூல்கள் கூறும். சங்கம் மருவிய காலத்து நூலாகிய நாலடியாரில், 11. "குடை கலனு உப்பிலி வெந்தை தின்று" எனக் கூறப்படுகின்றது.

**பயன்படுத்தியோர் யார் ?:**

பழங்காலத்தில் இன்றைக்கு உள்ளன போன்ற உண்கலன்களையும் பயன்படுத்தினர். பொன்வட்டில் பழந்தமிழரின் செல்வச் செழிப்பிற்கு ஏற்ப? உண்கலமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குமண வள்ளலைப் பாடும்போது பெருஞ்சித்திரனார்,

12. "குய்கொள் கொழுந்துவை நெய்யுடை அடிசில்
 மதிசேர் நாண் மீன் போல நவின்ற
 சிறுபொன் னன்கலம் சுற்ற விரீஇ"

எனக் கூறுவார்.

13. "மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி"

எனப் பெரும்பாணாற்றுப்படை பெருமையோடு புகழ்ந்துரைக்கும். இப்படிப்பட்ட உண்கலங்கள் உயர்ந்த செல்வர்கள் இல்லத்தில் இருந்தன. ஆயின் வறுமை நிலையிலும் வசதிக்குறைவிலும் வாழ்ந்தவர்கள் 'பனங்குடையினால்' ஆகிய உண்கலன்களையே தங்கள் தகுதிக்கு ஏற்பப் பயன்படுத்தினர் என்று கொள்ள இடமேற்படுகின்றது.

**சோற்றைப் பொதிந்து சென்றனர் :**

இன்று நாம் வெளியூர் செல்கின்றோம் எனில் அங்கே உணவு விடுதிகள் இருக்குமென்றால் வெறுங்கையோடு செல்கின்றோம். அவ்வாறு உணவகங்கள் ஒன்றேனும் இல்லாத ஊராயின் வாழையிலையில் உணவைப் பொதிந்து எடுத்துச் செல்கின்றோம். இதனைப் போன்றே, நெடுந்தொலைவு செல்பவர்கள் சோற்றினைப் பொதிந்து கொண்டு செல்வதற்குப் பனையோலையால் செய்யப்பட்ட பனங்குடையினைப் பயன்படுத்தினர் என்பதனை,

14. "உறுகண் மழவர் உருள்கீண் டிட்ட
ஆறுசெல் மாக்கள் சோறுபொதி வெண்குடை"

எனவரும் அகநானூற்றுப் பாடலால் உணர்ந்து கொள்ளமுடிகிறது. சோறுமட்டுமா பொதிந்து எடுத்துச் சென்றனர். இல்லை, சோற்றோடு புலாலையும் சேர்த்துக் கொண்டு பனங்குடையில் கட்டிச்சென்ற செய்தியினை,

15. "பைந்நிணம் பெருத்த பசுவெள் ளமலை
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய
இரும்பனங் குடையின் மிசையும்
பெரும்புலர் வைகறைச் சீர்சா லாதே"

எனவரும் புறப்பாடல் கூறுகின்றது. "நிணம் மிக்க புதிய வெண்சோற்றுக் கட்டியை வருவார்க் கெல்லாம் ஒப்பக் கொடுவந்து சொரியப் பெரிய பனையோலையானியன்ற குடையிலே நுகரும் பெரிய புலர்ச்சியையுடைய விடியற்காலத்துச் சீருக்கு நிகர் ஒவ்வாது" என்பது இதன் பழைய உரை.

ஒருவன் மிகப்பெரும் செல்வனாக இருந்து, பின் செல்வம் நீங்கின காலத்தில் தன் கடகம் செறிந்திருந்த கைகளினால் கீரைகளைப் பறித்து அதனையே உப்பில்லாமல் அவித்து, உண்டான். செல்வம் இல்லா வறுமைக்காலத்தில் அவனுக்கு உண்கலமாக உதவியது பனை ஓலையின் முடக்கு ஆகும். இச் செய்தியை உள்ளடக்கிய பாடல் ஒன்று சங்கம் மருவிய காலத்து நூலாகக் கருதப்படும் நாலடியாரில் வருகின்றது. அப்பாடல் இது :

16. "கடகம் செறிந்ததங் கைகளால் வாங்கி
அடகு பறித்துக்கொண்டு அட்டு—குடைகலனா
உப்பிலி வெந்ததின்று உள்ளற்று வாழ்பவே
துப்புரவு சென்றுலந்தக் கால்"

இனைய செய்திகளால் பனங்குடை பழங்கால மக்களுக்கு உண்கலமாகப் பயன்பட்டமை இனிது புலனாகும்.

பிறவற்றுக்கும் பயன்பட்டமை :

உணவுக் கலமாகப் பயன்பட்ட பனங்குடை, சோறு பொதிந்து கொண்டு செல்ல மட்டுமின்றி, தண்ணீர் குடிக்கவும், கள்ளைக் குடிக்கவும், பூக்களைப் பறித்துப் போட்டுக் கொள்ளவும் பயன்பட்டுள்ளது. தண்ணீர் குடிக்கப் பயன்படும் இப் பனங் குடை கலித்தொகையில் உவமையாகக் கையாளப்படுகின்றது.

தோளின் நலத்தை உண்ட கணவனால் துறக்கப்பட்ட பெண்ணைத் தண்ணீர் வேட்கையினால் கோலித் தண்ணீர் குடித்துவிட்டு எச்சிற்படுத்திப் போடப்பட்ட பயனற்ற குடை யோலையைப் போல என்று ஒப்பிடுகின்றார் புலவர்.

17. "தோள்நல முண்டு துறக்கப் பட்டோர்
வேணீர் உண்ட குடையோ ரன்னர்"

என்பது கலித்தொகை அடிகள்.

கபிலர், பாரியின் பாதுகாப்புடைய பலாமரங்கள் நிறைந்த பறம்புமலையைப்பற்றிக் கூறும் பொழுது, பலவாகிய பனங் குடையிலிட்டுண்ணும் கள்ளினாலாகிய பேருணவு பற்றிப் பேசுவார்.

18 "..................... ஒள்ளிழைக் குறுமகள்
பேரிசை உருமொடு மாரி முற்றிய
பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
பலவுறு குன்றம் போல"

என்பது அப் பாடல். பனங்குடையில் பூக்களைப் பறித்து இடுவதும் உண்டு என்பதனை,

19. "மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து"

எனவரும் அடிகளால் உணரமுடிகின்றது. இதனை இன்று 'பூக்குடலை' என்று அழைப்பர்.

உரையாசிரியர் கண்ட விளக்கங்கள் :

பனங்குடை எவ்வாறு செய்யப்பெறும் என்பதில் உரை யாசிரியர்கள் சிறிது வேறுபடுகின்றனர். டாக்டர். உ. வே. சா. தம் குறிப்புரையில், "பனம் மட்டையாற் செய்யப்பட்ட ஒரு கருவி; பனம்பட்டை யெனத் தென்னாட்டில் வழங்கும்" என்றெழுதினார். உரைவேந்தர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, "பனையினது பச்சோலையால் உட்குடையதாகச் செய்யப்படுவது" என்றார். "பனம்பசுங் குடை என்றது, பனங் குருத்தாற் செய்த பூங்குடலையை" என்பது பெருமழைப் புலவர் விளக்கம். 'குடையோலை' என்பது நச்சினார்க்கினியரின் கூற்றாகும். "குழிந்த ஒரு கலமாக (அதில் இட்டு)" என்று தருமரும், "(பனை நுங்காற்) செய்யப்பட்ட குடையே கலனாக"

என்று பதுமனுரும் நாலடியார்ப் பாடல் உரையில் குறித்துள்ளனர். 'வெள்ளிய பனை ஓலையால் ஆகிய குடை' என்பது அகநானூற்றில் நாட்டார் கூறுகின்ருர். இவ்வாறு 'பனங்குடை'க்குப் பல்வேறு விளக்கங்களைக் கூறியுள்ளனர் உரையாசிரியர்கள்.

**பனங்குடையால் பெயர் பெற்றவர்:**

புறநானூற்றுப் புலவர் ஒருவர் 'ஊன்பொதி பசுங்குடையார்' என அழைக்கப்படுகின்ருர். இவர் பாடிய பாடல்கள் புறநானூற்றில் நான்கு பாடல்கள் (10, 203, 370, 378) உள்ளன. இவருடைய இயற்பெயர் தெரியவில்லை என்று உரைகாரர் கூறுவர். மேலும், ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை "இதனிடத்தே ஊன் பொதிந்து கொண்டு செல்வதை வியந்து, இவ்வாசிரியர் 'ஊன் பொதி பசுங்குடை.' என்று பாடிய சிறப்பால், இவர் ஊன் பொதி பசுங்குடையார்' எனப்படுகின்ருர். (புறம் : 10. முன்னுரை). 20. 'வழக்க ஒழுக்கத்தால் பெயர் பெற்ற புலவர்' வரிசையுள் இவரை அடக்குகின்ருர் டாக்டர். ந. சஞ்சீவி. மனங்கவரும் புனைந்துரைச் சொற்கள்—சொற்ருெடர்கள் புலவர்களின் இயற்பெயர்களாக வருதலைப் பற்றிக் கூறுமிடத்து, 21. "இப்பெயர், 'ஊன் பொதி பசுங்குடை' யென்ற சொற்ருெடரிலிருந்து அமைக்கப் பட்டிருத்தல் வேண்டும். உட்குழிந்த கலம் போன்ற பச்சோலைக் குடம் (இக்காலத்தில் தொன்னை எனப்படுவது) என்பது இத் தொடருக்குப் பொருள். இக்குடம் பசிய பனையோலையாற் செய்யப்படுவது. நிறைய ஊன் பொதிந்து வைக்கப்பட்ட இத்தகைய குடம் ஒன்று ஊன்பொதி பசுங்குடை எனப்பட்டது" என்கிருர் டாக்டர். மொ. அ. துரை அரங்கனுர். இப்போது கிடைத்துள்ள நான்கு புறப்பாடலிலும் ஊன்பொதி பசுங்குடை பற்றிய குறிப்பு இல்லை. இனி ஏனைய பாடல்களைப்பற்றிய செய்திகள் வருமாறு :

| பாடல் நூலும் எண்ணும் | கையாண்டுள்ள தொடர் | புலவரின் பெயர் |
|---|---|---|
| புறம் : 177 | இரும்பனங்குடை | ஆவூர் மூலங்கிழார் |
| புறம் : 352 | பசுங்குடை | பரணர் |
| அகம் : 121 | வெண்குடை | மதுரை மருதனிளநாகனுர் |
| நற் : 253 | பல்குடைக்கள்ளின் | கபிலர் |
| குறுந் : 168 | இரும்பனம்பசுங்குடை | சிறைக்குடி ஆந்தையார் |
| கலித் : 23 | குடை | பாலைபாடிய பெருங்கடுங்கோ |

மேற்கண்ட அட்டவணையில் இயற்பெயர் தெரியாத ஊன் பொதி பசுங்குடையார் பாடல் வரவில்லை. அவர் ஊன் பொதிந்து பனங்குடையில் கொண்டு செல்வதனைச் சிறப்பித்துப் பாடியதனுல் இப்பெயர் பெற்ருர் என்பது பெயரை அடிப்படையாக வைத்துச் சொல்லப்படும் காரணம் என்பது தெளிவு. அவரியற்றிய பாடல் கிடைப்பின் மிக நலம் பயப்பதாகும்.

இதுகாறும் கண்டவற்ருல் பனை ஓலையினுல் செய்த கலத்தில் உணவைப் பொதிந்து சென்றனர் என்பதும், நீர் குடிக்கவும், பூப்பறித்திடவும் பயன்படுததினர் என்ற பண்டைச் சமுதாயப் பழக்கமும் பெறப்படுகின்றது.

மேற்கோள் விளக்கப் பட்டியல் :

1. "பனங்குடை - Pan an-Kutai, n<id. Ola basket for holding Palmyra juice or food, பதநீர், சோறு முதலியவற்றை வைப்பதற்குப் பனையோலையாற் செய்த பட்டை"
Tamil Lexicon. Vol II. Page ; 2570.

2. புறம் : 177. உ. வே. சா. பதிப்பு.
3. குறுந் : 168. ,,
4. புறம் : 10. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை குறிப்புரை. கழகப் பதிப்பு.
5. குறுந் : 168. உ. வே. சா. பதிப்பு.
6. அகம் : 121. நாட்டார் உரை. கழகப் பதிப்பு.
7. நற்றிணை : 253. கழகப் பதிப்பு.
8. கலித் : 23. ,,
9. புறம் : 352. உ. வே. சா. பதிப்பு.
10. புறம் : 177. ,,
11. நாலடி : 287. தஞ்சை சரசுவதி மகால் பதிப்பு.
12. புறம் : 160. உ. வே. சா. பதிப்பு.
13. பெரும்பாண் : வரி : 477. கழகப் பதிப்பு.
14. அகம் : 121. கழகப் பதிப்பு.
15. புறம் : 177. உ. வே. சா. பதிப்பு.
16. நாலடி : 287.
17. கலித் : பாலைக்கலி : 23. கழகப் பதிப்பு.
18. நற் : 253. ,,
19. குறுந் : 168. உ. வே. சா. பதிப்பு.
20 சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள். டாக்டர். ந. சஞ்சீவி. பக் : 32.
21. சங்க இலக்கியச் சிறப்புப் பெயர்கள். டாக்டர். மோ. அ. துரை அரங்கனுர். பக். 97.

———

# செய்திகளும் குறிப்புகளும்

## உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 23ஆம் கருத்தரங்கு

4-8-76 மாலை 6 மணி அளவில் சென்னை மாவட்ட நூலகக் கட்டடத்தில், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் டாக்டர் வி. ஏ. தேவசேனாபதி அவர்கள் தலைமையில் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் 'அருணகிரிநாதர்' என்னும் பொருள் பற்றி எழுத்துரை வழங்கினார்.

## திருவாலவாய்ச் சைவசித்தாந்த சபையின் 19ஆம் ஆண்டு நிறைவு விழா

இச் சபையின் 19ஆம் ஆண்டு நிறைவு விழாவும் கா. சா. தேவாரப் பாட சாலையின் 3ஆம் ஆண்டு பரிசளிப்பு விழாவும், ஊர்வலமும், திருமுறைப் பெருமை நூல் வெளியீட்டு விழாவும் முறையே ஆகஸ்டுத் திங்கள் 8, 9ஆம் நாள்களில் சிறப்பாக நடைபெற்றன.

## சர். ஏ. இராமசாமி முதலியார் மறைவு

சிறந்த அரசியல் அறிஞரும், ஆங்கிலத்தில் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்ச் சொற்பொழிவாற்றுந் திறம் படைத்தவரும், பெரிய தொழிலதிபருமான சர். ஏ. இராமசாமி முதலியார் அவர்கள் 17-7-76இல் தமது 89ஆம் அகவையில், சென்னையில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து மிக மிக வருந்துகிறோம்.

பெரும்புகழோடு மறைந்த டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியாரவர்களும் சர். ஏ. இராமசாமி முதலியாரவர்களும் இரட்டையராகப் பிறந்தவராவர்.

குறிப்பு: இவர்தம் வரலாறும் படமும் அடுத்த இதழில் வெளியிடப் பெறும்.

## செவ்வாய்க் கோளில் உயிர்கள் வாழ முடியுமா?

செவ்வாய்க் கோளில் உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய உயிர்வளி உண்டா இல்லையா என்று இதுகாறும் ஐயத்திற் கிடமாயிருந்த நிலை மாறி உயிர்கள் வாழ்தற்கு வேண்டிய சில அமைப்புகள் உள்ளன என்று இப்போது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. கடந்த 20—7—76இல் செவ்வாயில் இறங்கிய வைக்கிங் 1 என்ற விண்வெளிக்கலம் அங்குள்ள சூழ்நிலைகளைப் படம் பிடித்து நிலவுலகிற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறது. உயிர் வாழ்க்கைக்கு வேண்டிய உப்பு வளியும் உயிர் வளியும் கிடைக்கின்றன என்ற செய்தி கிடைத்துள்ளது. அமெரிக்கா விடுத்த 'வைக்கிங்' என்னும் செயற்கைக்கோள் செவ்வாயில் இறங்கி மண்ணையும் வெட்டி எடுத்துள்ளது. அது நிலவுலகிற்கு வந்தபின் ஆராயப்படும். கிருமி அளவுள்ள உயிரினங்கள் வாழ்வதற்கான அறிகுறிகளும் காணப்படுகின்றன என்ற செய்தியும் வந்துள்ளது. வைக்கிங் 2 என்ற விண்கலமும் செவ்வாய்க் கோளைச் சுற்றி வருகிறதாம்.

இங்ஙனம் ஆளில்லாமல் 50 கோடி மைல்களுக்கப்பாலுள்ள செவ்வாய்க்கோளில் ஆராய்ச்சி நடத்தும் அறிவியலை நோக்குவார், வள்ளுவர் கூறிய

"அறிதோறு அறியாமை கண்டற்றால்"

என்னும் உண்மையும்,

"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்"

என்ற கருத்தும் ஈண்டு நினைவுகூர்தற் குரியன.

## ஆட்சிமொழிபற்றி ஆராயப் புதிய குழு

நடுவணரசு அண்மையில் திரு ஓம் மேத்தா அவர்களின் தலைமையில் அமைத்த நாடாளுமன்ற உறுப்பினர் 30 பேரைக் கொண்ட குழு ஒன்று இந்தியை ஆட்சிமொழி யாக்குவதில் அடைந்துள்ள முன்னேற்றம் பற்றி ஆராய்ந்து வருகிறது. ஆராய்ச்சியும் முடிந்து அறிக்கையும் குடியரசுத் தலைவருக்கு அனுப்பப்பட்ட பின் ஆட்சி மொழி பற்றிய முழுச் செய்திகளும் வெளிவரும் எனத் தெரிகிறது.

## இந்தி படிக்க உதவிச் சம்பளம்

இந்தி பேசாத மாநிலத்தில் படிக்கும் மாணவராக இருத்தல் வேண்டும். அம் மாணவரின் தாய்மொழி இந்தி மொழியாக இருக்கக் கூடாது. அப்படிப்பட்ட மாணவர்கள் மெட்ரிக் தேர்வுக்குப் பிறகு இந்தி படிக்க விரும்பினல் அவர்களுக்குத் தொடர்ந்து உதவிச் சம்பளம் தருவதென இந்தியப் பேரரசு முடிவு செய்துள்ளது. இத் திட்டத்தின் படி 1976-77ஆம் ஆண்டில் 2300 பேருக்கு இவ் உதவிச் சம்பளம் தரப்படும்.

## பல்லவர் காலக் கல்வெட்டுகளின் புதிய கண்டு பிடிப்பு

செங்கற்பட்டு மாவட்டம், மதுராந்தகம் வட்டத்தைச் சேர்ந்த ஓரத்தி என்னும் ஊரில், கி. பி. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் கல்தூண் ஒன்று 29-7-76இல் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இந்தத் தூண் பல்லவ மன்னன் தந்திவர்மன் காலத்தில் நக்கன் என்பவரால் நிறுவப்பட்டதாகத் தெரிகிறது. இதில் பழங்காலச் சிற்பங்களும் எழுத்துகளும் செதுக்கப்பட்டுள்ளன. இந்த ஊரில் நெல்வாய் ஏரியின் வடக்குப் பக்கத்தில் இரண்டு 'நடுகற்கள்' கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

## திருவள்ளுவர் தமிழ்க்கல்லூரி

சென்னை நக்கீரர் கழகத்தின் சார்பில் நடைபெற்றுவரும் திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரியின் 34ஆம் ஆண்டுத் தமிழ் வகுப்புகள் தொடக்க விழாவும் வெற்றி பெற்ற மாணவர்களுக்குப் பாராட்டு விழாவும் 30-7-76இல் சென்னைப் பவழக்காரத் தெரு ஏ. ஆர். சி. மகளிர் பள்ளியில் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் தலைமையில் நடைபெற்றது. அரு. சங்கரலிங்கம் பி. எசி. அவர்கள் வரவேற்புரை வழங்கினர். சித்த மருத்துவ மாமணி டாக்டர் ப. சிற்சபை அவர்கள் தொடக்க வுரையாற்றினர். வெற்றி பெற்ற மாணவர்

களைப் பாராட்டி, செல்வி இலெமிஷவா ஒல்கா, டாக்டர் சி. பால சுப்பிரமணியம், திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். (நூலகர், மறைமலையடிகள் நூலகம்) ஆகியோர் உரையாற்றினர்.

## முப்பெரும் புலவர்கள் நூற்றாண்டு விழா

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையின் சார்பில் 31-7-76இல் கவிமணி, மறைமலையடிகள், கா. நமச்சிவாய முதலியார் ஆகிய பெரும்புலவர்களின் நூற்றாண்டு விழாவும், அதன் தொடர்பான நூல் வெளியீட்டு விழாவும் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டடத்தில் நடை பெற்றது. விழாவிற்கு முன்னாள் துணைவேந்தர் தாமரைத் திரு. நெ. து. சுந்தர வடிவேலு அவர்கள் தலைமை தாங்கினார்கள். குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா, 'திருக்கோயில்' ஆசிரியர் திரு. ந. ரா. முருக வேள், பெரும்புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை ஆகியோர் நூற்றாண்டு விழா உரையாற்றினர். தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், டாக்டர் கா. மீனாட்சிசுந்தரனார் ஆகியோர் சிறப்புரை யாற்றினர். திரு. நெ. து சுந்தர வடிவேலு அவர்கள் தமிழாய்வு முதலிய 2 நூல்களை வெளியிட்டார், ருசிய நாட்டைச் சேர்ந்த செல்வி லெமிஷேவா ஒல்கா நூல்களைப் பெற்றுக்கொண்டார்.

## திருமுறை இசைவிழா

திருக் குடந்தை திருமுறை மன்றத்தின் மூன்றாவது ஆண்டு நிறைவு விழா 21-7-76இல் திரு. சோமேசர் திருக்கோவிலில் திரு. முருகன் திரு. முன்னர்ச் சிறப்புற நடைபெற்றது. திரு. என். சேதுராமன் B. Sc. D. M. I. T. துவக்க உரையாற்றினார். இவ் விழாவினை யொட்டித் திருமுறை இசையரங்கும் நடைபெற்றது.

## 'சித்தயோக மகா சக்தி' நூல் வெளியீட்டு விழா

வடலூர் ஞானசித்தர் வை. முத்து அடிகள் எழுதிய' சித்தயோக மகா சக்தி' நூல் வெளியீட்டு விழா 18-7-76இல் மைய நூலகக் கட்டடத்தில், முன்னாள் உயர்நீதி மன்ற நடுவர் என். மகாராசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு எம். ஆர். சாத்திரி வரவேற் புரை நிகழ்த்தினார். செரிப் ஆர். இராமகிருட்டிணன் நூலை வெளி யிட்டார். ஔவை நடராசன், கீ. இராமலிங்கனார், நா. பார்த்தசாரதி ஆகியோர் நூலின் சிறப்புப் பற்றிப் பேசினர்.

## ''இமயமும் குமரியும்'' பற்றிய கருத்தரங்கு

தேசிய இலக்கிய மன்றத்தின் சார்பில் ''இமயமும் குமரியும்'' என்னும் பொருள் பற்றிய கருத்தரங்கு 15-7-76இல் மயிலை இரா சேசுவரி திருமணமண்டபத்தில் கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. சகந்நாதன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மன்றத்தின் தலைவர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். தமிழறிஞர்கள் சிலர் உரையாற்றினர்.

## மறைமலையடிகளார் நூற்றாண்டு விழாக்கள்

தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளாரின் நூற்றாண்டு விழா தமிழகத்தில் மட்டுமின்றிக் கடல் கடந்து தமிழர் வாழும் நாடுகளிலும் கொண்டாடப்பட்டு வருகின்றது.

15-7-76இல் பாண்டுகுடி தமிழியக்கத்தின் சார்பில், கோடனூர் ஊராட்சி மன்றத்தலைவர் திரு. சு. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் மறைமலையடிகளார் நூற்றாண்டு விழாக் கொண்டாடப் பெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் சிறப்புரை ஆற்றினர்.

ஈழத் தமிழ் எழுத்தாளர் பேரவையும், இலங்கை மத்திய வங்கித் தமிழ் இலக்கிய மன்றமும் இணைந்து, கொழும்பு சரசுவதி மண்டபத்தில் திரு. ஈழவேந்தன் அவர்கள் தலைமையில் 17-7-76இல் மறைமலையடிகளார் நூற்றாண்டு விழாவினைக் கொண்டாடினர். இவ் விழாவினை யொட்டித் "தமிழக மறு மலர்ச்சியில் மறைமலையடிகளார்" என்னும் நூல் வெளியிடப்பெற்றது. உரையரங்கு, பாஅரங்கு முதலியனவும் நடைபெற்றன.

## "அவிரோத உந்தியார்" நூல் வெளியீட்டு விழா

"அவிரோத உந்தியார்" என்னும் மெய்யறிவு நாலுக்கு இராவ் சாகேப் திரு. நல் முருகேச முதலியார் அவர்கள் ஆக்கிய ஆங்கில மொழி பெயர்ப்பு நூலின் வெளியீட்டு விழா 1-8-76இல், சென்னை மாவட்ட மைய நூலகக் கட்டடத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளவர் தலைமையில் நடைபெற்றது. தொழிலதிபர் நா. மகாலிங்கம் அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார்கள். உயர்நீதி மன்றத் தலைமை நடுவர் பி. எஸ். கைலாசம் அவர்கள் நூலை வெளியிட்டார்கள். தவத்திரு முத்துக்குமாரசாமி அடிகளார், தவத்திரு சற்குரு இராமசாமி அடிகளார், திரு. ம. பொ. சிவஞானம், டாக்டர் டி. எம். பி. மகாதேவன் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். தவத்திரு இராமசாமி அடிகளார் வாழ்த்துரை வழங்கினர்.

## மொகஞ்சதாரோ பற்றிய சொல் ஒப்பீட்டாராய்ச்சி (Concordance)

சிந்து சமவெளியில் 4000 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த மக்களின் நாகரிகம் பற்றி ஆராய மொகஞ்சதாரோ அரப்பா பகுதிகளில் அகழ்வாராய்ச்சியில் ஈடுபட்டுள்ள பின்னிஷ் நாட்டு அறிஞர்கள் அச் செய்திகள் பற்றிய சொல் ஒப்பீட்டாராய்ச்சி நூல் ஒன்றினைக் 'கம்யூட்டர்' என்னும் கருவியின் உதவியால் தொகுத்துள்ளனர். அதனை உருசியர்கள் தம்முடைய மொழியில் பெயர்த்து வெளியிட்டுள்ளனர். ஐ. மகாதேவன் என்னும் இந்திய அறிஞர் அதனை இந்திய மொழியில் வெளியிட முயன்று வருகிறார்.

## சீனாவில் அச்சந்தரும் நில நடுக்கம்

கடந்த 25-7-76இல் சீன நாட்டில் பீகிங் நகருக்குக் கிழக்கே மிகப் பெரிய தொரு நில நடுக்கம் ஏற்பட்டது. அதன் விளைவாகப் பத்து நூறாயிரம் மக்கள் உயிரிழந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. பெரிய நிலக்கரிச் சுரங்கம் உள்ள டாங்ஷான் நகரம் தான் இந்நில நடுக்கத்தால் நிலை குலைந்து நிற்கிறது. நில நடுக்கம் பீகிங் நகரை நோக்கி நகர்வதாகவும் சொல்லப்படுகிறது. கடந்த 31-7-76இல் பீகிங் நகரில் உள்ள 60 நூறாயிரம் மக்களும் தம் வீடுகளை விட்டுத் தெருக்களில் தங்கியிருப்பதாகச் செய்தி வந்தது. மக்களுக்குப் பாதுகாப்பான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன. இனி அடுத்து என்ன நிகழுமோ என உலகமே சீனாவை நோக்கிய வண்ண மிருக்கின்றது.

# மதிப்புரை

## திருக்குறள் இசைமலர்

[ஆசிரியர்: கவிஞர் பு. ஆ. முத்துக்கிருஷ்ணன். கிடைக்குமிடம்: வானதிப் பதிப்பகம், தி. நகர் சென்னை-17. விலை: ரூ. 5-00]

திருக்குறள் எங்கும் பரவ வேண்டுமானால் அஃது இப்போதுள்ள இயற்றமிழ் வடிவில் மட்டும் இருத்தல் போதாது. இசை அரங்குகளில் இசையாகவும் நாடகமேடைகளில் நாடகமாகவும் செயல்படு மளவிற்கு அதனை முத்தமிழ் இலக்கியமாகத் திகழச் செய்தல் வேண்டும். திருக்குறளைப் பற்றிய அளவில் இம் முத்தமிழ்ப் பணிகளுள் இசைத்தமிழ்ப் பணிக்கு ஆக்கம் அளிக்கும்வகையில் இந்தத் "திருக்குறள் இசைமலர்" என்னும் நூலினை உருவாக்கியுள்ளார் இந் நூலாசிரியர். அதிகாரத்திற்கு ஒன்றாக 133 இசைப்பாடல்களும், அவற்றின் சிறப்பினை விளக்கும் 11 பாடல்களும் கொண்டு, கருத்துக்கேற்ற இராகங்களுடன் அமைக்கப்பெற்றுள்ளன. இசைவாணர்கள் இவ் விசைப் பாடல்களுள் சிலவற்றையேனும் இசை யரங்குகளில் தவறாது பாடுவது என்று உறுதி கொள்வார்களாயின் இந் நூலின் பலன் பெருகும் என்பதில் ஐயமில்லை.

## அச்சுக்கலை

[ஆசிரியர்: திரு. மா. சு. சம்பந்தன். கிடைக்குமிடம்: பாரிநிலையம், சென்னை-1. விலை: ரூ. 10-00]

அறிவுலகத்தில் பொது உடைமைச் சமநெறியைப் பரப்பியது அச்சுக்கலையேயாம். அதன் வரலாறு ஏறக்குறைய ஐந்நூறு ஆண்டுகட்கு மேற்பட்டது. அதனைச் சுருக்கிச் சுவைபடத் தருவதே இந் நூல்.

இந் நூலின் ஒரு பகுதியாகத் தமிழ் அச்சுக்கலை தோன்றி வளர்ந்த வரலாறு மிக விரிவாக ஆராயப்பட்டுள்ளது. மொழி, இலக்கிய வரலாற்றாய்வாளர்கட்கும் தமிழ் இலக்கிய மாணவர்களுக்கும் முதன் முதல் தமிழ்ப் புத்தகங்கள் அச்சான விவரங்கள் மிகவும் பயன்படக் கூடிய வகையில் இந் நூலில் தொகுத்துக் கொடுக்கப் பெற்றுள்ளன.

நூலின் பின் பாதியில் அச்சகம் அமைக்கும் வகைமையும் அச்சகத்தில் பயன்படும் பொருள்கள் அனைத்தைப் பற்றிய விளக்கமும் காணலாம்.

இவ்வளவு பயனுடைய செய்திகளை இந் நூல் கொண்டுள்ளமையால்தான் நீண்ட நாள் தேவையை நிரப்புவதற்காக இதன் இரண்டாம் பதிப்பு எழுந்துள்ளது. அச்சுக்கலை பற்றி வேறு சிறந்த நூல் இதுகாறும் தமிழில் இல்லை என்று கூறுமளவிற்கு இலக்கியச் சுவைமிக்க எளிய நடையில் நூலைப் படைத்தமைக்காக நூலாசிரியரைப் பாராட்டுகிறோம்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.

ஆசிரியர்: வ. சுப்பையா.

# பிறபதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| திருக்குறள் இசைமலர்—பு. ஆ. முத்துக் கிருஷ்ணன் | 5 | 00 |
| குறள் கூறும் இறைமாட்சி—டாக்டர் தி. முருகரத்தினம் | 6 | 00 |
| குறள் கூறும் சமுதாயம்—காமாட்சி சீனிவாசன் | 10 | 00 |
| கம்பராமாயணம்—சென்னைக் கம்பன் கழகம் | 75 | 00 |
| வானொலியில் வள்ளலார்—ம. பொ. சி | 1 | 00 |
| இருபது அம்சத்திட்டம்—அரு. சோமசுந்தரன் | 3 | 00 |
| இந்தியா-இந்திரா 75—தமிழ்நாடன் | 7 | 00 |
| விண்வெளி அற்புதங்கள்—மோகன் சுந்தரராஜன் | 9 | 00 |
| பறவை உலகம்—ஸலீம் அலி | 18 | 75 |
| வாழ்க்கை ஒரு வானவில்—நாதன் | 9 | 00 |
| வானம்பாடி—சி. ஆர். ராஜம்மா | 6 | 00 |
| தொட்டிக்கட்டுவீடு—இரா. வடிவேலன் | 9 | 00 |
| போகமும் யோகமும்—கிருத்திகா | 2 | 50 |
| எண்ணங்கள் மாறலாம்—ர. சு. நல்லபெருமாள் | 9 | 00 |
| கவிதை உள்ளம்—அ. மு. பரமசிவானந்தம் | 5 | 00 |
| திருமந்திர நெறி—ஜி. வரதராஜன் | 6 | 00 |
| முத்தரையர்—நடன காசிநாதன் | 4 | 50 |
| கல்வெட்டுக்களில் புதுவைப்பகுதிகள்—புலவர். சு. குப்புசாமி | 12 | 00 |
| வயிறுகள்—பூமணி | 6 | 00 |
| ஆரண்யா காண்டம் சிறுகதைகள்—கொ. மா. கோதண்டம் | 8 | 00 |
| குறிஞ்சிப் பாட்டு இலக்கியத்திறனுய்வு—தமிழண்ணல் | 2 | 25 |
| பத்துப்பாட்டிலொன்று —சு. முருகன் | 2 | 75 |
| பெரிய வெற்றி (நாடகம்)—க. பெருமாள் | 8 | 50 |
| வரலாற்று வடிவங்கள்—புலவர் சு. குப்புசாமி | 7 | 00 |
| மனோரஞ்சிதம்—கோவி மணிசேகரன் | 7 | 25 |
| வாரியார் சுவாமிகள்—சிவ. சுப்பிரமணியன் | 3 | 00 |
| யோகாசன விளக்கம்—யோகி என். ராஜன் | 2 | 00 |
| பள்ளிப்பறவைகள்—ஆலந்தூர் கோ. மோகனரங்கன் | 1 | 75 |
| அறிவியல் தமிழ்—டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் | 6 | 00 |
| அன்னை பராசக்தி—நடராஜன் (நஜன்) | 2 | 50 |
| தமிழாய்வு (தொகுதி-4) —தாமரைத்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் பாராட்டுமலர் | 10 | 00 |
| நாலும் இரண்டும்—அ. மு. பரமசிவானந்தம் | 2 | 50 |
| அருள்சுரக்கும் சக்தி ஆலயங்கள்—தெய்வசிகாமணி | 5 | 00 |
| சுழிப்பு—டாக்டர் இரா. தண்டாயுதம் | 3 | 50 |
| அச்சுக்கலை - மா. சு. சம்பந்தன் | 10 | 00 |
| வானொலி வழியே—மா. சு. சம்பந்தன் | 3 | 00 |
| Visnuism and Saivism—J. Gonda | 40 | 00 |
| South India and Sri Lanka—K. K. Pillay | 9 | 00 |
| Kuruntokai—M. Shanmugam pillai & David Ludden | 80 | 00 |

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம் சென்னை-1.